"நான் செக்ரெட்டரி
ஆகையால் ஸ்மார்ட்டாக இருக்கத்தக்க உடை அணிய வேண்டுமல்லவா."

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி



ம:பத்லால்
:பேப்ரிக்ஸ்



ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ் ம:பத்லால் :பைன்

MF-4-TAM

# காமாட்சி தேறிவிடுவாள்



காஞ்சிபுரத்தில் உள்ள காமாட்சி அம்மன் கோயில் யானைக்கு உடல் நிலை சரியில்லாததால் அவதிப்படுகிறது. மக்களின் வேண்டுகோளுக்கிணங்க அறநிலைய அமைச்சர், யானைக்குத் தீவிர சிகிச்சை அளித்துச் சீக்கிரம் குணமாக்க மிருக வைத்தியர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியை வரவழைத்தார். டாக்டர் கிருஷ்ண மூர்த்தியை நமது நிருபர் சந்தித்தபோது:

**யா**னைக்கு ஆபத்தில்லை. மருத்துவ சிகிச்சைக்கு முழுமையாக ஒத்துழைக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாகத் தேறியும் வருகிறது. ஓர் ஆங்கிலத் தினசரிப் பத்திரிகையின் தவறான செய்தியால்தான் இந்தப் பரபரப்பே ஏற்பட்டது. இதற்கு மூலகாரணம் எஸ். பி. ஸி. ஏ. சங்கத்தைச் சேர்ந்த ஒருவர். இந்த யானை நோய்வாய்ப்பட்டிருக்கிறது என்று தெரிந்தவுடன் அவர் காஞ்சீபுரம் வந்து விசாரித்திருக்கிறார். யானைக்கு மிகவும் சரியாக மருத்துவம் பார்த்துக் கொண்டு வரும் என் சக வைத்தியர் டாக்டர் நாராயணசாமியிடம் ''நீங்கள் எந்த முறையில் வைத்தியம் பார்க்கிறீர்கள்? என்னென்ன மருந்து கொடுக்கிறீர்கள்?'' என்று கேட்டிருக்கிறார். அவர் ''நீங்கள் வைத்தியராக இருந்தால் நான் சொல்லுவேன். இல்லாவிட்டால் உங்களுக்குப் புரியாது'' என்று கூற, எஸ். பி. ஸி. ஏ. அதிகாரி கோபமடைந்திருக்கிறார். ஆங்கிலப் பத்திரிகை வழியாகக் கோபம் வெளிப்பட்டு விஷயம் மிகப் பெரிதாகி விட்டது.

பெண் யானை காமாட்சியைப் பொள்ளாச்சியில் உள்ள டாப்ஸ்லிப் என்ற இடத்தில் வன விலங்குத் துறையைச் சேர்ந்த நாங்கள் பிடித்தோம். சுமார் 200 யானைகள் வரை பிடிக்கப்படும்போது நான் மேற்பார்வையிட்டிருக்கிறேன். பல நூறு யானைகளின் பிள்ளைப் பேற்றையும் பார்த்திருக்கிறேன். ஏழு ஆண்டுகள் எங்களுடனிருந்த காமாட்சியை சுந்தர சாஸ்திரிகள் 10,000 ரூபாய்க்கு வாங்கிக் கோயிலுக்கு அன்பளிப்பாக அளித்தார்.

யானைக்குக் காலில் எப்படி உபாதை ஏற்பட்டது என்று யாராலுமே சரியாகச் சொல்ல முடியவில்லை. காமாட்சியின் பாகன் தங்கவேலு விடுமுறையில் செல்ல அவருக்குப் பதில் அவரது உறவினர் ஒருவர் யானையைப் பார்த்துக் கொண்டிருந்தார். கருட சேவையின்போது பக்கத்திலேயே பட்டாசுகள் வெடித்ததால் பயந்திருக்கலாம். கோயிலுக்கே திரும்பி ஓடிவந்தது. யாரையும் துன்புறுத்தவில்லை. அதனிடம் எப்பொழுதுமே அன்பாய் இருக்கும் குருக்கள், ''காமாட்சி நில்லம்மா!'' என்று கத்தித் தைரியமாக நிறுத்தியிருக்கிறார். இவ்வளவு நேரமும் யானையின் மேல்தான் பாகன் உட்கார்ந்திருக்கிறார். அவருக்கும் ஒன்றும் நேரவில்லை.

காமாட்சி நின்ற பின் இறங்கிய பாகன் கோபமடைந்து முள்வேலியால் யானையின் இரண்டு கால்களையும் பிணைத்தான் என்று கூறுகிறார்கள். இரண்டு மூன்று நாட்களில் கால்கள் 'செப்டிக்'காகி விட்டன. இதற்குள் பழைய யானைப்பாகன் வந்துவிட இவன் காணாமல் போய்விட்டான்.



✖ டாக்டர் கிருஷ்ண மூர்த்தி

மூன்று மாதங்களாக நாங்கள் தொடர்ந்து சிகிச்சை அளிக்கிறோம். முன்பிருந்ததற்கு இப்பொழுது எவ்வளவோ குணமாகி விட்டது. கார்ட்டிசானும், ஆன்டி பயாடிக்கும் மருந்துகள். தினம் ஒத்தடம் கொடுத்துக் கட்டு மாற்றுகிறார்கள். குளியல் யானைக்கு அவசியம். மூன்று மாதமாகத் தண்ணீர் பக்கமே செல்லாததன் விளைவு பிறப்புறுப்பில் அரிப்பும் மூத்திரத் துவாரத்தில் எரிச்சலும் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு இப்பொழுது சிகிச்சை நடக்கிறது.

சமீபத்தில் காமாட்சி என் தலையில் துதிக்கையால் ஒரு தட்டுத் தட்டிய தன் விளைவு கழுத்து சுளுக்கி ஒரு வாரம் அவஸ்தைப் பட்டேன்!

மலையாளத்திலும் தமிழிலும் பேசினால் புரிந்து கொள்கிறது. ஆனால் நோய்வாய்ப் பட்டிருப்பதால் சற்றுப் பொறுமை இழந்து காணப்படுகிறது.

சதை ஊசி போட 15, 16 கேஜ் ஊசிகளைப் பயன்படுத்துவோம். தொடை, வாலுக்கு அடியில் இந்த ஊசிகளைப் போடுவோம். ரத்த நாளத்தில் போட வேண்டுமென்றால் காதுக்கடியில்தான். மருந்து சாப்பிடப் படுத்தாது. கோயிலைச் சுற்றிய கடை வீதிகளில் டீக்கடையில் டீயும், காப்பிக் கடையில் காப்பியும் குடித்துப் பழகியுள்ளது காமாட்சி. காப்பியுடன் குவளையைக் கொடுத்தால் குடித்து விட்டுக் குவளையைத் திருப்பித் தரும். அந்தப் பழக்கத்தில் நாங்கள் கரைத்த மருந்தைக் குவளையில் ஊற்றிக் கொடுத்தால் குடித்து விட்டுக் குவளையைத் திருப்பித் தருகிறது.

12 வயதான காமாட்சி சீக்கிரம் தேறி விடுவாள். நான் மட்டுமல்ல. காமாட்சியிடம் பற்றுள்ள எல்லோரும் காஞ்சி காமாட்சியிடம் இதைத்தான் வேண்டுகிறார்கள். பேட்டி: **சலன்**

# Kalki Shopping Page

**கனகதாரா**
**மோதிரம்-டாலர்**

... ரூ. 20 ... ரூ. 25 ... ரூ. 5 ...

V.P.P. மூலம் ...

**சக்தி. ஜி. சம்பந்தன்**
"சக்தி நிலையம்" 52, பள்ளிக்கூடம் தெரு
சென்னை-600072.

---

# எல்லா வயதினருக்கும் எல்லா தேவைகளுக்கும் கைத்தறி!

**கோ-ஆப்டெக்ஸ்**
கைத்தறி

கோ-ஆப்டெக்ஸ்
விற்பனை நிலையம்
54 வடக்கு மாட வீதி,
மயிலை, சென்னை-4
அருகில் உள்ள
விற்பனை நிலையங்களுக்கு
வருகை தாரீர்!

---

கல்யாணம், மற்றும் விசேஷங்களுக்கு

எழில் மிகு நங்கையரின்
எண்ணங்களைக் கவரும்
வண்ண வண்ண ரகங்களில்

காஞ்சிபுரம், தர்மாவரம், ஆரணி
**பட்டுச்சேலைகள்**

தேர்ந்தெடுக்க
மதுரையில் சிறந்த இடம்

# S.R.B.

FASHION CREATORS IN SILK SAREES

**S.R.B. சில்க்ஸ்,**
229, கீழமாரெட் வீதி, மதுரை-1.
போன்: 22036.

---

**ஸ்ரீ ராஜேஸ்வரி ஹால்**

பட்டு

121, ராஜ வீதி
கோயமுத்தூர்-641001
போன்: 25859

**உஷா**
சாரி பாரடைஸ்
333 ராஜ வீதி, கோயமுத்தூர்-641001
போன்: 33369

ஆத்மாஸ்


சத்தியாக்கிரகம் நான் வழி!
உருப்படாது!
ரெட் கார்பெட் வரவேற்பு!
எதிர்க்கட்சியாக ஒன்று படும் முயற்சி
காலைவாரி விட்டுடுவார்!


பிறந்த தினத்துக்கு பிரதமரின் வாழ்த்து மட்டுமல்லாமல்


சத்தியமா சொல்றேன்!...
சத்தியமூர்த்தி பவன் மீது ஆணையா சொல்றேன்!

1980 செப்டம்பர் 21
ரௌத்திரி புரட்டாசி 5
மலர்: 39 இதழ்: 8



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# விலைவாசி குறைய வழி

விலைவாசி உயர்ந்திருக்கிறது — உணராதார் இல்லை.

விலைவாசி குறைய வேண்டும் — விரும்பாதார் இல்லை.

எப்படி குறைப்பது? — யோசனை கூறுவார் இல்லை.

கூறினாலும் — இந்த சர்வாதிகார ஆட்சியில் கேட்பார் இல்லை.

விலைவாசிகள் எப்போது ஏன் உயர்கின்றன?

உற்பத்தி, தேவையைப் பூர்த்தி செய்யாத போதும்;

உயரத்தில் உள்ள நீரானது தாழ் நிலைக்குப் பாய்வது போல் பொருள்கள் தேவைப்படும் இடத்துக்குச் சுதந்திரமாகச் செல்லத் தடை விதிக்கும் பர்மிட் — லைசென்ஸ் — கோட்டா முறை காரணமாகவும்;

பண வீக்கத்தாலும், அரசாங்கம் இதனை லட்சியம் செய்யாது உற்பத்திக்கு உதவாத செலவினங்களை அதிகரிக்கும் போதும்;

பற்றுக்குறை பட்ஜெட்டை ஈடுகட்ட நோட்டு அச்சடித்துப் பணப்புழக்கத்தை அதிகரிக்கும் போதும்;

பர்மிட் — லைசென்ஸ் — கோட்டா முறையால் பதுக்கலும் கறுப்புப் பணமும் பெருகும் போதும்; (நமது தேசத்தில் ஆண்டொன்றுக்கு எஃகு, சிமெண்டில் மட்டும் முறையே 1000 கோடியும் 500 கோடியும் கறுப்புப் பணம் உற்பத்தியாகிறது).

தேர்தலுக்காகத் தொழிலதிபர்களிடம் ஏராளமாகப் பணம் பெற்றுக் கொண்டு பின்னர் அவர்களுக்குச் சலுகைகள் காட்டும் போதும்;

உற்பத்தியைப் பாதிக்கும் வேலைநிறுத்தங்களும் கதவடைப்புகளும் தினசரி நிகழ்ச்சிகளாகும் போதும்;

லாபமில்லா விட்டாலும் அரசியல் காரணங்களுக்காகக் கட்டாய போனஸ் வழங்கப்படும் போதும்;

கோடிக்கணக்கான முதலீடுகளைக் கொண்ட அரசு நிறுவனங்கள் கோடிக் கணக்கில் நஷ்டமடையும் போதும்;

செயல் திறனற்ற அரசு கள்ளச் சந்தை, கள்ளக் கடத்தலைத் தடுக்கத் திராணியற்று இருக்கும் போதும்; (சர்க்கரை பாகிஸ்தானுக்குக் கள்ளத்தனமாகக் கடத்தப் படுவதைத் தடுத்தாலே இங்கு சர்க்கரை விலை சரிந்து விடும் என்கிறார் திரு நா. மகாலிங்கம்.)

இறக்குமதியான பண்டங்கள் அரசின் மெத்தனத்தால் துறைமுகங்களிலேயே தூங்கும் போதும்; (இரண்டு லட்சம் டன் எஃகு ஆறுமாதங்களாக பல்வேறு இந்தியத் துறைமுகங்களில் தூங்குகிறது, ரயில்வே வாகன் பற்றுக்குறை காரணமாக.)

விலைவாசிகள் ஏறும்.

இவையெல்லாம் பொருளாதாரத்தில் ஆரம்பப் பாடங்கள். இவற்றையே நம் அமைச்சர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. உணர்ந்தாலும் உருப்படியாக ஏதும் செய்யத் தயாராயில்லை.

மாறாக விலைகளை நிர்ணயித்து உத்தரவு போட்டு விட்டால் விலைகள் குறைந்து விடும் என்று எண்ணுகிறார் சுக்லா, அரசன், கென்யூட் போல. பொருள்களின் விலையைக் கடை வாசலில் பெரிதாக எழுதி வைக்க வேண்டும் என்ற தனது உத்தரவைக் கூட அமல்படுத்த முடியாமல் தவிக்கிறது இந்த அரசு. அத்தியாவசியப் பண்டங்கள் சட்டமும் கறுப்புச் சந்தை தடுப்புச் சட்டமும் ஒன்றுக்கும் உதவவில்லை. தோட்டா இல்லாத துப்பாக்கிகளே.

பொருளாதார இயற்கை நியதிகளுக்கு உட்பட்டு விலைகள் குறைய வேண்டுமே தவிர, கட்டாயத்தினால் விலைகளைக் குறைக்கப் பார்ப்பது கள்ள மார்க்கெட்டும் கறுப்புப் பணமும் மேலும் அதிகரிக்கவே வழி வகுக்கும்.

இறக்குமதியாகும் பெட்ரோலியத்தின் விலையை நாம் நிர்ணயிக்க முடியாதுதான். ஆனால் அதன் மீதும் மற்ற இனங்களிலும் உள்ள வரிகளைக் குறைத்து, சேமிப்பைப் பெருக்கி, உற்பத்தியை அதிகரிக்க ஆவன செய்யலாம். மக்கள் ஓரளவேனும் நிவாரணம் பெற, மேலே பட்டியல் போட்டுள்ள பொருளாதார காரணங்களை ஆராய்ந்து அரசு தன்னைத் திருத்திக் கொள்ளலாம்.

அரசு ஆட்சி புரிவதுடன் நிறுத்திக் கொண்டு தொழிலையும் வியாபாரத்தையும் பெரும்பாலும் மக்களே சுதந்திரமாக நடத்த விட்டு விட வேண்டும். இன்னும் ஐந்தாண்டுகளுக்கு வேலைநிறுத்தம் கதவடைப்பு கிடையாது என்று அவசரச் சட்டம் பிறப்பிக்க வேண்டும்.

விலைவாசி உயர்வுக்குக் காரணம் ஆர். வியோ சுக்லாவோ அல்ல. இந்திரா காங்கிரஸ் அரசு கடைப்பிடிக்கும் கொள்கைகளே.

தொழிலதிபர்களையும் தொழிற் சங்கத் தலைவர்களையும் பிரதமர் சந்தித்து, 'அப்பா, மகனே' என்று கெஞ்சினால் காரியம் நடக்காது. சுயநலம் மனித இயல்பு. அந்த சுய நல இயல்பு அவர்களுக்கு மட்டுமின்றி சமுதாயத்துக்கே பயன்படுகிற மாதிரி சாணக்கியம் செய்வது ஆட்சிச் சிறப்பு.

---

# ஆண்கள் துணி துவைக்கலாமா?

— விஜய்

அன்புள்ள ஆசிரியரவர்களுக்கு:

சென்ற இதழ் கேள்வி பதில் பகுதியில் ஒரு வாசகர் 'துணிகளைத் துவைப்பது ஆண்கள் வேலைதானா?' என்று கேட்டிருந்த கேள்விக்குச் சரியான பதில் அளிக்காமல் மழுப்பியிருக்கிறீர்கள். தைரியமில்லாவிட்டால் ஏன் பதிலளிக்க வேண்டும்? நிச்சயமாகச் சொல்கிறேன் — அது ஆண்கள் வேலையே தான்!

காரணம்— காரணம்— ஓ, காரணம்—

குறிப்பிட்டுச் சொல்லும்படியாக ஒன்றுமில்லை! (இந்தக் கடிதத்துக்கு ரூ. 5 பரிசு எனக்குத் தரவேண்டாம்)

—பல்லாவரம் வாசகர் டிஸ்னி.

''வாசகர் டிஸ்னிக்குள் ஒளிந்துகொண்டு இரிசமன் செய்வது யார்? ஒரு பெண் பிள்ளை தானே! இல்லாவிட்டால் சூடு சுரணையற்றுத் துணி துவைப்பதாகப் பெருமைப்படுவாரா? என்னே, மடமை!

—கலாவதி தாசன், கண்ணனூர்

''இதில் சூடு சுரணை என்ன வேண்டியிருக்கிறது? இதுவரை பெண்களாகிய நாங்கள் வெட்கமில்லாமல் ஆண்களுடைய துணிகளைத் தோய்த்து உலர்த்தவில்லையா? இனியாவது எங்களுக்குச் சுதந்திரம் கிடைக்குமா?

—ராமலட்சுமி, நாகப்பட்டினம்.

''வீட்டு வேலைகளைச் செய்வது பெண்களுக்கு அழகுதானே? இதில் என்ன சுதந்திரம் வேண்டிக் கிடக்கிறது? போகிற போக்கைப் பார்த்தால் ஆண்கள் சமையல் வேலை கூடச் செய்து தரவேண்டும் என்று ராமலட்சுமி கேட்பாரோ! —ஆறுமுகம், அருகநேரி

''இப்போதைய பிரச்னை துணி துவைப்பது மட்டும்தான் — புதிதாக ஏதாவது கிளப்பி மாட்டிக்கொள்ளப் போகிறார் வாசகர் ஆறுமுகம்!

சேஷன், சேரிபுரம்.

''ஏன், என்னைப்பொறுத்தவரை சமையல் வேலை கூட அவ்வளவு சிரமமில்லை. இந்தத் துணி துவைப்பது என்பது, அடித்துத் துவைத்து விடலாம்—ஆனால் நாலு பேர் பார்க்கும்படி—உலர்த்துவது தான் சங்கடம்! இந்த உலர்த்தும் விஷயத்திலாவது, சகோதரிகள் ஒத்துழைப்பார்களா?

—அய்யாசாமி, அய்யம்பேட்டை

''தங்களது விவாத மேடை உண்மையிலேயே ஒரு Brain Storming Session ஆகி விட்டது! Keep it up! ஆசிரியருக்கு நான் கூறிக்கொள்வது இதுதான்: கடந்த எட்டு வருடங்களாக என் கணவர்தான் சமையல் வேலை அனைத்தையும் பிழையறச் செய்து, துணியும் துவைத்து உலர்த்தி (இதுக்குப் போய் அலட்டிக்கலாமா?) வற்றல், வடகம் எல்லாம் கூட இட்டு எனக்கு உதவியாக இருந்து வருகிறார். அது மற்ற கணவன்மார்களுக்கு ஒரு சாட்டையடியாக இருக்குமா?

—மங்கையர்க்கரசி, மேலூர் மாதர் சங்கத் தலைவி.

''...அப்பட்டமான பொய்!... வெட்கக் கேடு!....—பெயர் குறிப்பிட அனுமதிக்கப்படாத துரதிர்ஷ்டசாலி, மேலூர்

''ஏதேது, ஆசிரியர்வாள்! இந்த விஷயத்தைக் குறித்துப் பட்டி மன்றமே நடத்தி விடுவீர்கள் போலிருக்கிறதே!... அது சரி... உம்ம வீட்டில்... சங்கதி எப்படி?

ராவுத்தர், மசூலிப்பட்டினம்.

(ம்!..... சொல்வதற்கில்லை! —ஆசிரியர்)

''இந்தச் சர்ச்சையைத் தொடங்கிவைத்தவன் என்ற முறையில் நான் திரும்பவும் எழுதுகிறேன். என் துணிகளை நானே தான் தோய்க்கிறேன். காரணம் நான் ஒரு பிரம்மச்சாரி. பிற்பாடு எப்படியோ?

—வாசகர் டிஸ்னி, பல்லாவரம்.





## வாசகர் விமர்சனம்

# சிவாஜி சகாப்தம் முடிந்துவிட்டதா?

இந்தச் சர்ச்சையினால் சிவாஜிக்கு பெருமையே அதிகம். யாருமே சிவாஜியின் நடிப்பையோ, அவரது திறமையையோ குறை கூறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. பல்வேறு மாறுபட்ட பாத்திரங்களில் சிவாஜி தோன்றி இன்னும் பல்லாண்டு காலம் தமிழ்த் திரை உலகுக்குச் சேவை செய்ய வேண்டும் என்றே நாம் விரும்புகிறோம்.

சேந்தமரம் ஐ. மீனாட்சிசுந்தரம்

● விளக்கம் என்ற பெயரில் விவாதத்தையும் அதன் தலைப்பையுமே மேஜர் சாடிவிட்டார்.

ஆனால் விவாதத்தின் கதாநாயகர் சிவாஜியோ "இனி சார்லஸ் லாட்டன் போன்று பொருத்தமான பாத்திரங்களில் அதுவும் ஆண்டுக்கு மூன்று என்று மட்டுமே நடிப்பேன்" என்கிறார்! (மேஜர் கூற்றுப்படி!)

பின் என்ன? விவாதத்துக்குப் பலன் கிடைத்துவிட்டதுதானே?

திருச்சி டி. ஆர். அலமேலு

● சிவாஜியைக் குறை சொல்லிப் பயனில்லை. தமிழ் சினிமாத் தொழில்தான் குற்றவாளி. தமிழ்ப் படங்களின் கதைக் கருக்களில் வித்தியாசமே இல்லை. ஒன்றைப் போலவே மற்றொன்று. ஹாலிவுட் படங்களைப் பாருங்கள். காட்ஃபாதர், மெக்கன்னாஸ் கோல்ட், கோமா, லாங்கஸ்ட் டே என்று எத்தனையோ பாக்ஸ் ஆபீஸ் வெற்றிகள். ஒவ்வொன்றும் ஒரு தனி பாணி.

சென்னை 25 வையாணன் தாமஸ்

● 'தீபம்' — 'தியாகம்' — திரிசூலம்'— சமீபத்திய மூன்றாண்டு காலத்துக்குள், அதாவது சிவாஜியின் வயதேறிய இந்தப் பருவத்திலேயே இந்த மூன்று படங்களும் வெளியாகி மகத்தான வெற்றி பெற்றிருக்கின்றன. மூன்றிலும் சிவாஜிக்கு முப்பதைத் தொட்ட வயதுள்ள கதாநாயகன் வேடம் தான். இவை மூன்றிலுமே காதல் டூயட்கள் —அணைப்பு — பிணைப்பு — ஓட்டம் — ஆட்டம் இவைகளோடுதான் காட்டப்பட்டன. குறிப்பாக வெள்ளி விழாக் கொண்டாடிய 'திரிசூலம்' படத்தில் 'குரு' என்ற குறும்புத்தனமான பாத்திரம் மக்களால் ஏகோபித்துப் பாராட்டப்பட்டது.

இவை மூன்றிலும் இயக்கியவர் இளமை நடிப்பு வேண்டாம் என்று அபிப்பிராயம் சொன்ன நண்பர் விஜயன்தான். வசனம் எழுதியவன் இந்தக் "குப்பை."

வயதுக்கேற்ற வேடம்தான் ஏற்க வேண்டும், அதுதான் நடிப்பின் இலக்கணம் என்றால் அப்பர் பெருமானாகவும் கப்பலோட்டிய தமிழனாகவும் மோட்டார் சுந்தரம் பிள்ளையாயும் சிவாஜி தோன்றியிருக்க முடியுமா?

சென்னை ஏ. எல். நாராயணன்

● ஒரு இயக்குநர் நல்ல கதையைத் தேர்ந்தெடுத்துத் திரைக்கதை அமைத்து இயக்க வேண்டும். நடிகருக்காக வசனம், அவருக்காகவே கதை என்பதை மறுத்துவிட வேண்டும். மறைந்த பீம்சிங் படங்களிலே கதை இருந்தது. சிவாஜிக்காக கதை பண்ணவில்லை. வியட்நாம் வீட்டிலிருந்துதான் சிவாஜிக்காக என எழுத ஆரம்பித்தார்கள். ரத்தபாசம் குழப்பமான சப்ஜெக்ட், பழைய தர்மராஜாவில் கதையைத் தேடுகிறோம். ஆழமான அழுத்தமான கதாபாத்திரங்களை சிவாஜிக்கு இன்றைய இயக்குனர்கள் விஜயன் உட்படத் தரவில்லை. சிவாஜிக்கு இணையாகப் போட்டி போட்டு நடிக்க மற்றவர்களுக்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படுவதில்லை. இதனாலேயே அவரது உயர்ந்து நிற்கும் நடிப்பு ஓவர்டோஸ் ஆகிவிடுகிறது.

சென்னை-17 கே.எல். விசாகன்

● கதாபாத்திரங்களைப் படைப்பதும், கொடுப்பதும் பிறர்தான். ஒத்துக்கொள்கிறேன். தேர்ந்தெடுப்பது சிவாஜிதானே! ஒருசில தயாரிப்பாளர்கள் கட்டாயப்படுத்துகிறார்கள் என்பதற்காகவும், வேண்டியவர்கள் என்பதற்காகவும் பல படங்களை ஒத்துக்கொண்டு, வியர்வை சிந்தி நடித்து என்ன பிரயோஜனம்?

அரைத்த மாவையே அரைத்துக் கொண்டு ஒரு வட்டம் போட்டுக் கொண்டு அதற்குள்ளேயே சுற்றி வரும் சிவாஜியின் போக்கு மாறத்தான் வேண்டும்.

இதை சிவாஜி கணேசன் சாடலாக எடுத்துக்கொள்ளாமல், என்போன்ற பல ரசிகர்களின் 'இப்படி நடிக்க மாட்டாரா' என்ற ஏக்கத்தைப் போக்கி, சண்டை, டூயட், கனவுக் காட்சிகள், பச்சை, பச்சையான வசனங்கள் உள்ள படங்களில் நடிக்காமல், நல்ல காரக்டர் ரோல்களைத்தேர்ந்தெடுத்து சாதனை புரியக் கேட்டுக் கொள்கிறேன்.

தர்மபுரி அனிதா நாகராஜன்

# உஷத்காலத்தில் ஓர் அஸ்தமனம்!

விந்யா.

போட்டிக் கதை. 3

“சுமா, சீக்கிரம் குளிச்சுட்டு வா.''

குழாய் நின்று விட்ட திடீர் நிசப்தத்தில் அம்மாவின் குரல் உருவம் பெற்றது. ரொம்ப நேரமாய் அவள் கூப்பிட்டுக் கொண்டு இருந்திருக்க வேண்டும். சுமங்கலி சிரித்துக் கொண்டாள்.

''அம்மா அப்பவே சொன்னு. ஒரு கை எண்ணெய் வைத்துப் பரபரன்னு தேய்ச்சு விடறேன். ஆற அமரக் குளிக்கிற நாள் இல்லே இது. மாப்பிள்ளையாத்திலேர்ந்து உன்னைப் பார்க்கக் காலம்பறலேந்து வர ஆரம்பிச்சுடுவா. முகூர்த்தம் வேறே சுருக்க வச்சுருக்கு.''

சுமங்கலி பாதங்களுக்கு மஞ்சள் பூசிக் கொண்டிருந்தாள். குனிந்தபோது மஞ்சள் சரடு மார்பில் ஆடியது.

முதன் முதலில் ஸ்ரீரங்கத்தில் காவிரி வாய்க்கால் வாசலைத் தொட்டு ஓடிக்கொண்டிருக்கும் பாட்டி வீட்டில் தான் பங்குனி நோன்பின்போது மஞ்சள் சரடு அறிமுகம்.

'பாட்டி நீ சாப்பிடலியா?'

'பாட்டி நோன்பிருக்கேண்டிம்மா குழந்தே. சாயங்காலமாக் குளிச்சுட்டுச் சரடு கட்டிண்டு அப்புறமாச் சாப்பிடுவேன்!''

'நீ என்னத்துக்கு நோன்பிருக்கே?'

'தாத்தாவுக்கு நல்ல ஆயுசு இருக்கணுமென்னுதான்.'

'நானும் சரடு கட்டிக்கணுமா?'

'ஆமாண்டி குழந்தே'

'எதுக்கு?'

'உன் வீட்டுக்காரர் சௌக்கியத்துக்கு.'

சமர்த்தாக அன்று முழுவதும் நோன்பிருந்து, விரதம் காத்து இரவு ஏழு மணியளவில் தலைக்குக் குளித்து, ஸ்லோகம் சொல்லிவிட்டுச் சரடு கட்டிக் கொண்டு பவித்ரமாய் வேண்டிக் கொண்டாள்.

அந்த விரதத்தின் காரண புருஷனை இன்று தான் சந்திக்கப் போகிறாள். 'உங்களுக்காக ஏழு வயசிலேருந்து விரதம் இருக்கேன் தெரியுமோ?'

''சுமா — சுமங்கலி.....''

''இதோ வந்துட்டேன்மா — சோப்பு தேச்சுண்டிருக்கேன்.''

அவருக்காக, கண்ணில் உருவமாகத் தெரியாத அவருக்காக, பங்குனி மாதம் மட்டுமல்லாமல், எப்போதுமே தவந்தான். ஆண்டாளுக்காவது பெருமாளின் ரூபம் தெரியும். நினைவு நன்றாகத் தெரிய ஆரம்பித்தபின்— பருவ வயதை எட்டியும்கூட தன் 'அவருக்கு' அவள் என்றுமே உருவம் கற்பித்ததில்லை. — இந்தக் கிருதா இறக்கிக்கொண்டு ஷர்ட் காலரை இழுத்து விட்டுக்கிறானே அவன் மாதிரியா? இல்லை உயரமா, ஒல்லியா, மாநிறமா பெருமாள் கோயில்லே உரக்க விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்றாரே, அவர் மாதிரியான்னு பக்கத்து வீட்டு வேதா மாமிரி மனசை வீணே அலட்டிண்டதில்லை. ஆனால் மனம் முழுவதும் அவர்தான் வியாபித்திருந்தார். அவர் நினைவுதான் அவள் உயிரோட்டத்தின் ஆதார சுருதியாக இருந்தது. இப்போ அவர் என்ன பண்ணிண்டிருப்பார்? (குளிச்சிண்டிருப்பார்? — தனக்குள் சிரித்துக் கொண்டாள்.)

எத்தனை தடவை இதே கேள்வியைத் தனக்குள் கேட்டுக் கொண்டிருந்திருப்பாள்? சோபாவில் உட்கார்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று நினைத்தாள் — ''இப்ப அவர் என்ன பண்





ணின்டு இருப்பார்? ஞாயிற்றுக்கிழமை ஆற அமரக் குளிச்சுட்டுச் சாப்பிட்டுண்டிருப்பார் ஆ... ஐயோ அவருக்குப் புரையேறிண்டுடுத்தே....'' பானையிலிருந்து குளிர் நீரை மொண்டுகொண்டு சாப்பாட்டுமேசைக்குப் போய்விட்டாள். — பிறகுதான் உறைத்தது. சே — நல்லவேளை யாரும் பார்க்கவில்லை. — இப்படித்தான் ஒன்றிப்போய்விடுவதோ — 'சுமங்கலி — அவா விட்டிலேர்ந்து உன்னைப் பார்க்க உறவுக்காராள்ளாம் வந்திருக்கா.'

'தோ வந்துட்டேம்மா.'

அன்றொரு நாள் அப்படித்தான். கடைக்குப் போய்விட்டு வரும்போது பலத்த மழை பெய்து கொண்டிருந்தது. திடீரென்று அவர் நினைவு — மடமடவென்றுக் ஆயிரம் எண்ண ஓட்டங்கள். திடீரென்று ஆட்டோவை நிறுத்திவிட்டுக் கொட்டுகிற மழையில் கடைக்குள் நுழைந்து ஒரு விக்ஸ் பாட்டில் வாங்கிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தாள். 'ஏம்மா ஆட்டோவிலே வந்தும் இப்படி நனைஞ்சு போயிட்டியே' 'இல்லேப்பா திடீர்னு ஞாபகம் வந்து விக்ஸ் வாங்கப் போனப்போ நன்னு நனைஞ்சு போய்ட்டேன்.' -விக்ஸ் எதுக்கு? நம்மாத்திலே யாரும் உபயோகப்படுத்திற இல்லேயே? இது என்ன க்ளேகோடின்வேறே. உங்கம்மாவுக்கு ஜலதோஷமா?' — அவன் என்னவோ மழுப்பி விட்டு அங்கிருந்து அகன்றான்.

''அப்பாடா ஒரு வழியா வெளியே வந்தியா? கிடுகிடுன்னு அலங்காரம் பண்ணிக்கோ. நாழியாயிடுத்து. ஃபானைப் போடு. தலையை சரக் போகக் காயவை. அப்பத்தான் பின்னின்னு சிடுக்காகாது!''— அம்மா பரபரப்புடன் தலையைத் துவட்டலானாள். அறை வாசலில் திடீரென்று ஒரு அறிமுகப் புயல் — 'சுமா நெத்திக் கிட்டுண்டு வா. உங்க புக்காத்து மாமியெல்லாம் வந்திருக்கா. நமஸ்காரம் பண்ணம்மா' அத்தையின் குரல் அவளை அவசரப்படுத்தியது.

போன தீபாவளியின்போது எதிர்த்த வீட்டு மாமியை நமஸ்காரம் பண்ணப் போனாள் சுமா. 'அடுத்த தீபாவளி தலை தீபாவளியா யிருக்கட்டும்' — மாமி மனம் நிறைய ஆசீர்வாதம் பண்ணினாள். அவ்வளவுதான். நினைவுகள் தறிகெட்டுத் தடுமாறின. இந்தத் தீபாவளியை அவர் எப்படித்தான் கொண்டாடுறாரோ? அதோ அவர்!... அந்த யானை வெடியை அவரா வெடிக்கப் போறார். ஐயையோ... அடிபட்டுடுத்தே. அவள் தலை தெறிக்க காமிரா உள்ளுக்குள் ஓடி டிங்சர் பாட்டிலோடு வெளியே வந்தாள். 'என்னம்மா காயம் பட்டுடுத்தா?' அம்மாபதறினாள். 'ஆமாம்... இல்லே....' அவள் தடுமாறினாள். 'கால் இடறி விட்டுடுத்து.... லேசா... ஒன்னுமில்லே.'

இது எப்படிச் சாத்தியமாகிறது? அவர் யார்னு தெரியாமலேயே அவரோடு ஒன்றிப் போன இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கையா? இதை அவசியம் அவர் கிட்டே முதல் நாளே சொல்லணும். — கன்னம் சூடேறியது.

''பெண் நல்ல சிவப்பு. நம்ப ராஜாவுக்குப் பொருத்தம்தான்.'' புக்ககத்து மாமிக்குப் பெருமை பிடிபடவில்லை.

''மாமி இங்கே ஒரு படிக் கோலம் போடணுமே. யாராவது வாங்கோ.''— சுப்புணி சாஸ்திரிகள் குரல் காதில் வந்து மோதியது.

'எங்க சுமா நன்னு கோலம் போடுவா.' அத்தை பெருமை பேசினாள். — 'பாவி. நீதான் போய்ப் போடேன். இன்னிக்கும் சுமாவே போடுவாளா என்ன?' பாட்டி அதட்டலாகக் கூவுவது சுமாவுக்குள் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

மார்கழி மாதங்கள் அவளின் நிரந்தர தவத்திற்கு அழகான வடிகாலாகச் செயல்

## அதுவும் சுயநலமே!



ஆப்ரஹாம் லிங்கன் ஒரு நாள் வழியில் ஒருபன்றி சேற்றில் சிக்கிக் கொண்டு தவிப்பதைப் பார்த்தார். தமது குதிரையிலிருந்து இறங்கி வெகு சிரமப்பட்டு அந்தப் பன்றியைச்சேற்றிலிருந்து வெளியே இழுத்துப் போட்டார். இவரது உடையெல்லாம் சேறாகப்போய் விட்டது.

''ஒரு பன்றி துன்பம் அடைவதைக் கூட பொறுக்காத மனம் கொண்ட ஒருவர் அமெரிக்க ஜனாதிபதியாக அமைந்தது நம்நாட்டுக்குப் பெருமை தானே!'' என்று பலர் லிங்கனைப் புகழ்ந்தனர்.

லிங்கன் அமைதியாகக் கூறியது: ''நான் அப்பன்றியின் துன்பத்தைப் போக்குவதற்காக அதை வெளியில் எடுத்து விடவில்லை. பன்றி துன்பப்படுவது கண்டு எனது உள்ளம் துன்பம் அடைந்தது. அத்துன்பத்தை நீக்கிக் கொள்வதற்காகத்தான் அப்படிச் செய்தேன். ஆகவே இதிலும் சுயநலம் தான் மேலோங்கி நிற்கிறது.''

-''தியாக பூமி ஏட்டிலிருந்து - தகவல்: ''சங்கரி புத்திரன்''

பட்டன. அதிகாலையில் நீராடி விதம் விதமான கற்பனைகளைப் புள்ளிகளும் கோடுகளுமாய் வெளிப்படுத்துவாள். தாமரைப் பூக்களும், சங்குகளும், கொடி விளக்குகளும், கிளிகளும் தேருமாய், வாசல் முற்றம் விதம் விதமாய்ப் பேசும். மாதவனைக் கோலங்களினால் அர்ச்சித்து அவருக்காகத் தவமிருந்தாள் சுமா. ஒரு நாள் அப்படித்தான் விடியற்காலை கடுங் குளிரில்வெடவெடத்துக் கொண்டு கோலம் போடுவதில் முனைந்திருந்த அவளுக்குள் பூத்தது ஒரு கனவுப்பூ. எங்கோ திடீரென்று காதில் வந்து மோதிய மோட்டார் பைக்கின் சப்தம் மனத்துக்குள் புதுக் கவலைகளைப் பிரசவித்தன. இப்படி விடியற்காலை குளிரில் ஸ்வெட்டர் கூடப் போட்டுக் காமல் எதிர்ப் பனிக் காற்றில் போனால் உடம்பு என்னத்துக்கு ஆகும் — அன்று மாலையே தன் தோழியுடன் மிகப் பிரசித்தமான கடைக்குச் சென்று அங்குள்ள ஸ்வெட்டர்களை ஆராய்ந்ததும் கடைக்காரன் சைஸ் கேட்டதும், திகைத்ததும், நினைவுக்கு வந்து அவள் முகத்தை மேலும் சிவப்பாக்கியது.

அன்று அவர்கள் அவளைப் பெண் பார்க்க வந்தபோது அவளுக்கு ஒரே க்யூரியாஸிடி— மனசு முழுதும் அருவமாய் வியாபித்துத் தன் நினைவே அவராகிவிட்ட நிலையில் கண்ணுக்குத் தெரியுறுப்பலே இப்ப வரப்போறது தான் அவரா — ஒரே ஆவலாய் அவள் இருந்தபோது அப்பா சொன்னார்: 'மாப்பிள்ளைக்குக் கடைசி நேரத்தில் லீவு கிடைக்கல்லையாம். மாப்பிள்ளையுடைய அம்மாவும் அப்பாவும்தான் வராளாம். அவாளுக்குப் பிடிச்சா அவருக்குப் பிடிச்ச மாதிரியாம்.'

மனசில் ஏதோ நொறுங்கியதோ? இல்லை இன்னும் என் தெய்வத்துக்குத் தரிசனம் தர மனம் இல்லை போலிருக்கிறது. — சுமா சமாதானப்பட்டுக் கொண்டாள்.

இரண்டு நாட்கள் கழித்து காமிரா உள்ளில் ஏதோ தேடியபோது அப்பா குரல் கேட்டது. 'மீனாட்சி, பையனை இன்னிக்கு நான் நேரிலே பார்த்தேன். பார்க்க ராஜாவாட்டம் இருக்கான். நம்ம சுமாவுக்குப் படு பொருத்தம்.'

'ராஜான்னா கிரீடம் எல்லாம் வச்சுண்டா?' சுமாவுக்குள் சிரிப்புப் பொங்கியது.

'போட்டோ வாங்கிண்டு வரக்கூடாதோ?'

'எனக்குத் தோணலை மீனாட்சி. இன்னும் ஒரு வாரத்திலே கல்யாணம், இப்பப் போய்... நேரேயே பார்த்துண்டாப் போச்சு.'

# கராத்தே பயிற்சி 6

பயிற்சியாளர்: டோனி பொன்னையா
சித்திரம்: [signature]
தயாரிப்பு: குன்டுமணி

## நடக்கப் பழகுதல்-3

### செய்ய வேண்டியது:

நடக்கப் பழகுதலில் கால்களை இணைத்து வைத்து, பிறகு பிரித்து, பின் முன் நோக்கி வைக்கப் பயில வேண்டும்.

பாதங்களை உள்புறமோ வெளிப்புறமோ வைக்கக் கூடாது. பாதங்களை நேர் முகமாக வைத்து முன் காலை நன்றாக மடக்க வேண்டும்.

இது தவறு
இது சரி
செய்யக் கூடாதது
தவறு
சரி

### செய்யக்கூடாதது:

முன்னும் பின்னும் நடக்கும் பொழுது கால்களை அகற்றி நடக்கக் கூடாது.

முன் பின் நோக்கி நடக்கும் போது தலையை ஏற்றி இறக்கக்கூடாது. உடலின் மேல் பாகத்தைச் சாய்க்கக்கூடாது. கண்களை இடது புறமாகவோ வலது புறமாகவோ செலுத்தக் கூடாது.

நிலையில் நின்று நடக்கப் பழகுதல் கராத்தே கலையின் முக்கிய அங்கம். கராத்தே கற்றுக் கொள்பவர்கள் இதை முறையாகக் கற்றுக் கொண்டால் தான் பின்வரும் நடை முறைகளையும், குத்து முறைகளையும், உதை முறைகளையும், சண்டை முறைகளையும் எளிதாகப் பயில முடியும்.

என் பெயர் ..............................

விலாசம் ..............................

..............................

..............................

கையெழுத்து ..............................

எங்கும் தமிழ்
எதிலும்
தமிழ்ங்கிறீங்களே,
சிகரெட்டுக்கு
ஒரு தமிழ்ப் பதம்
சொல்ல முடியுமா?

# மாதாந்திரப் பரிசுத் திட்டம்

• செப்டம்பர்.



● இது மூன்றாவது புகைப்பட குவிஸ். மொத்தம் நான்கு குவிஸ்களையும் கத்தரித்து எடுத்து விடைகளை அது அதிலேயே எழுதி, நான்கையும் ஒன்றாக, "கல்கி மாதாந்திர பரிசுத் திட்டம், தபால் பெட்டி எண் 3159, சென்னை-32" என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

நான்கு விடைகளையும் சரியாக எழுதியவர்களுக்கு மூன்று மாத கல்கி இலவசம். அவர்களில் ஒருவர் ரூ. 1000 பரிசு பெற குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவார்.

முடிவு தேதி: அக்டோபர் 22.

இந்த வார குவிஸ்:

ஸ்ரீதேவி கூறும் எட்டு எழுத்துப் பெயரில் காளி இல்லாவிட்டாலும் நாசி உண்டு; ஆனி உண்டு ஆனால் ஆடி இல்லை. அதை எழுதுங்கள்.

---

நேரே அவனை அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். அம்மியிலே வெண் பட்டாய்த் தன் பாதத்தைப் பற்றி அவன் பதிக்கையில் அம்மியைப் பார்ப்பது போல் அவனைப் பார்த்தாள். அம்மா — இவரையா இத்தனை நாள் நான் நினைச்சுண்டு இருந்தேன்? முதல்லே இதை அவர் கிட்டே சொல்லணும். சொன்னாப் புரியுமோ? — பைத்தியம்னு நெனைச்சா?

'நனுங்கிட ரா ரா ராஜகோபாலா' - ஏதோ ஒரு சின்னப் பெண் கீச்சுக்குரலில் கத்தியது.

'ஏய் — சுமா. எல்லாத்திலேயும் விட்டுக் குடுத்திடாதே — சாமர்த்தியமா இரு' நனுங்குக்கு அவளை அத்தை தயார்ப்படுத்தினாள்.

என்னையே கொடுத்தப்புறம் — இந்தச் சின்ன விஷயத்துக்குப் போய் — நினைவோட்டத்தைத் தடைப்படுத்தியது. அப்பாவின் குரல். 'நனுங்கு வேண்டாங்கறார் மாப்பிள்ளை.' மீண்டும் மனத்தில் சூனிய வெளி.

'ரிஸப்ஷன் முடிய இன்னும் கொஞ்ச நேரம்தான் இருக்கு. அதற்குள் அந்தக் கோடி அறையை அலங்காரம் பண்ணணும்' சாமாவின் குரல் சோபாவில் அவர் பக்கத்திலிருந்த சுமங்கலிக்குக் கேட்டது. அவனுக்குத்தான் — மெல்லக் கண்ணுக்குள் அவள் சிரிப்பது அவனுக்குத் தெரிந்தது.

'ம்... உள்ளே வா சுமா! பயமா?"

காலில் ஒரு கூடைப் பூக்களாய்க் குவிந்தவள் "எனக்கென்ன பயம்?" என்றாள். 'நான்தான் உங்களோடு... என்னோடு...." "ம் சொல்லு சுமா" - அவன் தன் அந்தரங்கத் தவங்களை அவனுடன் பகிர்ந்து கொண்டாள். ஆச்சரியங்கள் அவனை ஆட்கொண்டன.

"நிஜமாகவா? — இத்தனை நாளும் நீ என்னைப் பத்தியே நினைச்சு நினைச்சா ஒவ்வொரு காரியமும் செய்தே?"

"உங்களைப் பத்தின்னு நம்ம கல்யாணம் நிச்சயமான அன்னிக்குத்தான் தெரியும்."

அவள் கண்கள் அவன் கண்களைச் சந்திக்க முடியாமல் திணறின.

திடீரென்று அவன் குரலில் ஒரு மாற்றம்.

"அப்ப வேறே யாரையாவது கல்யாணம் பண்ணிண்டு இருந்தா இதயேதானே அவனிடமும் சொல்லியிருப்பே?"

துடிதுடித்து நிமிர்ந்த கண்கள் அவன் இறுகிய முகத்தைக் கண்டு திகைத்தன.

'ம்.' — அவன் பதிலை மிரட்டினான்.

'ஆமாம்" என்றாள் அவள் மெதுவாக. அவள் இன்னும் தன் அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. அந்த நிமிஷத்தின் பயங்கரம் அவளைச் சித்ரவதை செய்தது. தன் புனிதமான பேரழகுத் தவங்கள் அனர்த்தமாகும்படி இப்படியும் ஒரு கோணத்திலிருந்து அவற்றைப் பார்க்க முடியும் என்று அவளால் நம்ப முடியவில்லை.

'சே! என்ன தேவடியாத்தனம்' — ராஜா அறையின் கதவைத் திறந்து ஓடினான்.

நிறைந்த விழிகள் நிலத்தை அர்ச்சித்தன. அவள் தனக்குள் பிரவாகித்த கங்கைக்குள் நான் ஆராதனை செய்து வந்த சுயம்பு லிங்கத்தைத் தேடிக் கொண்டிருந்தாள்.

இலக்கியங்களிலே
துகில் படைப்புக்கள் — 12

# சுபத்திரை



# பூண்ட சுந்தரக் கோலம்

கண்ணபிரானின் தங்கையான சுபத்திரையை மணம் புரியும் நோக்கத்துடன் அர்ச்சுனன் துறவி வேடம் பூண்டு துவாரகாபுரி செல்கிறான். கிருஷ்ணன், சுபத்திரையை அந்த இளந்துறவிக்குப் பணிவிடை செய்ய அனுப்புகிறான். சுபத்திரையும் அவ்வாறே பணிவிடை செய்து வருகிறாள். பின்னர் அத் துறவியின் உண்மை வடிவத்தை அவர் வாயிலாகவே அறிந்து கொள்கிறாள். இருவரும் கிருஷ்ணனின் உதவியால் காந்தர்வ மணம் செய்து கொண்டு இந்திரப் பிரஸ்தம் நோக்கிப் புறப்படுகிறார்கள்.

இந்திரப் பிரஸ்தத்திற்கு சமீபத்தில் உள்ள ஓர் இடைச்சேரியில் இருவரும் தங்கி இளைப்பாறும் போது, அர்ச்சுனன் சுபத்திரையை நோக்கி, "சுபத்திரை, நீ உன்னுடைய மெய்யான வடிவத்தில் என்னுடனே வந்தால், திரௌபதி மனம் நொந்து கோபம் கொள்ளக் கூடும். ஆகையால் நீ ஒரு ஆயர்குலப் பெண் போல் மாறுவேடம் பூண்டு, இங்குள்ள இடைப் பெண்களுடன் முன்னே சென்று திரௌபதியைப் பணிந்து அவளுடைய நல்லாசிகளைப் பெற்றுக் கொள். திரௌபதி ஒருபோதும் தன் வாக்குத் தவற மாட்டாள்", என்று கூற, சுபத்திரையும் அதற்குச் சம்மதிக்கிறாள்.

பின்னர் அர்ச்சுனன், தானே தன் அழகிய மனைவிக்கு மாற்றுடைகள் அணிவிக்கத் தொடங்குகிறான். உருவத்தில் ஆயர்குலப் பெண்ணாகவே மாறிவிட்ட சுபத்திரை, இடையர் குலப் பெண்களை அழைத்துக் கொண்டு இந்திரப் பிரஸ்தம் செல்கிறாள். அங்கு குந்தியையும் திரௌபதியையும் பணிந்து, நல்லாசிகளையும் நன் மதிப்பையும் பெற்று விடுகிறாள். பின்னர் சுபத்திரையை அடையாளம் கண்டு கொண்ட திரௌபதி, சற்றும் சினம் கொள்ளாமல், இதுவும் கண்ணனின் திருவிளையாடலே என்று கூறி மகிழ்கிறாள்.

—ஸ்ரீ மத் பாகவதம்: தசமஸ்கந்தம்

நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.



**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

காந்தி நகரில் குறிப்பிட்ட விலாசத்தை மீண்டும் சென்றடைந்த பாலு, சைக்கிளை சாலையோரம் விட்டு விட்டு சுவரேறி குதிக்க....




# 007 பாலு 8

கதை: குமரன் படம்: விஜு

குரல் வந்த வென்டிலேட்டர் பக்கம் பாலு பதுங்கி நடக்கிறான்.




பூமி மட்டத்துக்கு அரை அடி உயரத்தில் இருந்த வென்டிலேட்டர் வழியாக பாலு டார்ச் அடித்துப் பார்க்க....




டார்ச்லைட் ஒளியை இங்கு மங்கும் வீச....




டைகரை விடுவிக்க தோட்டத்தில் நீண்ட கழி ஒடித்து அதில் டார்ச் லைட்டையும் கூரிய பேனாகத்தியையும் கட்டி, வென்டிலேட்டர் வழியாக நுழைக்கிறான் பாலு!




வெரிகுட்! டைகருக்குப் போட்டிருந்த வாய்ப் பூட்டை அறுத்தாச்சு! நல்லவேளை, சங்கிலியால் பிணைக்காமல் டைகரை கயிற்றினால்தான் கட்டியிருக்காங்க. அதையும் அறுத்துடலாம்!


விடுதலை பெற்ற டைகர் படியேறி ஓடி....


பின்புற வாசலை அடைந்து, ஒரு மோடாவை கதவருகே தள்ளி....


அதன்மேல் ஏறி தாழ்ப்பாளைத் திறக்க.....
குட்பாய்! டைகர்! தேங்க்யூ! நான் உள்ளே வந்து இந்த வீட்டைக் கொஞ்சம் ஆராயணும்!


பாலு உள்ளே நுழையவும் விளக்கு எரிகிறது.
வா தம்பி! வீட்டை ஆராயணுமா?... எங்களுக்குக் கூட உன் எலும்புகளை ஆராயணும். பொடிசா நொறுங்குமா பார்க்கணும்!
தொடரும்

சட்டமும் சமுதாயமும்

# மரண தண்டனை அவசியம் தானா?

**புதிய அட்வகேட் ஜெனரல் திரு ஆர். கிருஷ்ணமூர்த்தியை ஒரு ஞாயிறு காலை அவருடைய இல்லத்தில் சந்தித்தபோது:**

**கே. அட்வொகேட் ஜெனரலின் முக்கிய பணிகள் என்ன?**

பதில்: ஒரு மாநில அரசின் முக்கிய வழக்கு களை ஏற்று நடத்தும் பொறுப்பும், மாநில அரசுக்கு சட்டரீதியான ஆலோசனை வழங் குவதும் அட்வகேட் ஜெனரலின் முக்கிய பொறுப்புக்களாகும்.

அட்வகேட் ஜெனரல் பதவிக்கு அரசு ஓர் அலுவலகமும் மாதாந்திர சன்மான மும் வழங்கும். இப்பதவி வகிப்பவர் தனிப் பட்ட முறையில் வேறு தனி நபர் வழக்கு களையும், மாநில, மத்திய அரசு சார்பான வழக்குகளையும் ஏற்று நடத்த எவ்விதத் தடையும் கிடையாது. ஆனால் தான் பதவி வகிக்கும் மாநில அரசுக்கு எதிரான வழக்கு களை ஏற்று நடத்தக் கூடாது.

**கே: ஏழை எளியவர்களுக்கு சட்ட உதவி கிடைப்ப தில்லையே?**

பதில்: 'தமிழக சட்ட உதவி ஆலோசனைக் குழு' என்ற பெயரில் ஓர் அமைப்பைத் தமிழக அரசு நிறுவியுள்ளது. இக்குழுவில் ஜஸ்டிஸ் திரு பி. ராமகிருஷ்ணன், ஜஸ் டிஸ் என். கிருஷ்ணசாமி ரெட்டியார் போன்ற சட்ட நிபுணர்கள் உள்ளனர். இக்குழு கிராமங்களுக்கும், மற்றும் பொரு ளாதார கீழ்மட்ட வர்க்கத்தினர் உள்ள இடங்களுக்கும் சென்று அவர்களுக்குத் தேவையான சட்ட உதவியை இலவச மாக அளிப்பதற்காகத் தமிழக அரசால் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இக்குழு ஏற் கெனவே செயல்படத் தொடங்கிவிட்டது. வெகு விரைவிலேயே நீங்கள் குறிப்பிட்ட குறை தீர்க்கப்படும்.

**கே: நீதி மன்றங்களில் ஏராளமாக வழக்குகள் குவிந்து கிடக்கின்றன என்றும் வெகு நாட் களாகத் தீர்க்கப்படாத வழக்குகளும் உள்ளன என்றும் கூறப்படுகிறதே?**

பதில்: ஜனத்தொகை அதிகரித்து நாட்டில் தொழில், வியாபாரத் துறை பரிவர்த்தனை களும் அதிகரித்து உள்ளதால் விவகாரங் களும் அதிகமாகி நீதிமன் றங்களில் வழக்குகள் பெருகியுள்ளன. சமீப காலத்தில் மக்களிடையே கல்வி அறிவும், சட்ட பூர்வமாக முக்கிய பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளும் நோக்கும் அதி கரித்து உள்ளன. அதிக அளவில் நீதிபதிகளை நிய மிப்பதாலும் வழக்கறி ஞர்கள் தாங்கள் கூற வேண்டிய சட்ட ஷரத்துக்களையும் வாதங் களையும் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறுவதன் மூலமும் இப்பிரச்னைக்குத் தீர்வு காண வழியுண்டு.

**கே: நீதி மன்றங்களுக்கு கோடைக்காலத்தில் சுமார் ஒன்றரை மாதக்காலம் விடுமுறை அளிக்கப்படு கிறதே! இது அவசியம் தானா? இந்த காலத்தில் நீதி மன்றங்கள் பணியாற்றினால் தேங்கி நிற்கும் வழக்குகளைத் தீர்க்கலாமே!**

பதில்: மற்ற துறைகளைப் போன்றதல்ல நீதித் துறை. காலை பத்து மணியிலிருந்து மாலைவரை ஒரு நீதிபதியோ அல்லது வக்கீலோ நீதிமன்றத்தில் பணியாற்றுவ துடன் அவரது வேலை தீர்ந்துவிடுவதில்லை. காலையிலும் மாலையிலும் கட்சிக்காரர்களைச் சந்திப்பது, வழக்குகளை விவாதிப்பது கேஸ் பேப்பர்களைப் படிப்பது போன்று ஒரு வழக்கறிஞருக்கு ஏராளமான வேலைகள் உண்டு. நீதிபதிக்கு வழக்கில் தீர்ப்பு அளிக்கும் பொறுப்பு இருப்பதால் அதற் கான சட்ட விளக்கங்களையும், பழைய தீர்ப்புக்களிலிருந்து முக்கிய அம்சங்களை யும் ஆராய வேண்டி இருக்கிறது. தூங்கும் நேரம் தவிர நாளெல்லாம் பணியாற்றி னாலும் வேலைப் பளு இருந்து கொண்டே இருக்கும். கோடைக்காலத்தில் நீதிமன்ற விடுமுறையின்போதுதான் ஒரு வழக்கறி ஞரோ நீதிபதியோ உண்மையிலேயே ஓய்வு எடுக்க முடியும். எனவே நீதிமன்றங் களுக்கு அளிக்கப்படும் கோடை விடுமுறை மிக மிக அவசியமானது.

**கே: மரண தண்டனை அவசியமா இல்லையா என் றொரு கேள்வி சமீப காலத்தில் எழுந்துள்ளது. தங்கள் கருத்து?**

பதில்: எல்லாக் கொலைகாரர்களுக்கும் மரண தண்டனை அளிக்கப்படுவதில்லை. மிகவும் கொடூரமாகக் கொலை செய்தவர்கள் திட்டமிட்டுக் கொலை செய்தவர்கள், போன்ற மிகச் சிலரே மரண தண்டனை பெறுவர். அப்போது நீதிபதி எதற்காக இத்தண்டனையை வழங்க முடி வெடுத்தார் என்று காரணங் களையும் விவரிக்க வேண்டும். எனவே அநியாயமாக ஒருவர் மரண தண்டனை பெறுவது சாத் தியமில்லை. மரண தண்டனை வழங்கச் சட்டத்தில் அனுமதி இருப்பது அவசியமாகத்தான் எனக்குப் படுகிறது. இதனால் இக்குற்றம் செய்பவர்களின் எண்ணிக்கையைக் கட்டுப் படுத்த முடியும். —நாயகன்

தமிழக அட்வகேட் ஜெனரல்
ஆர். கிருஷ்ணமூர்த்தி








திருமணம். இந்தச் சொல்லைக் கேட்டதுமே சுற்றிலும் கமழும் மனங் கவர் மணம், நாதஸ்வரத்தின் இன்ப நாதம், தவில் எழுப்பும் ஓங்கார ஒலி ஆகியவை நம் முன்பு நிழலாடு கின்றன.

மணமகள்? ஆம். உங்கள் அருமை மகள் தான். இந்த வைபவம் நிறைவு பெற லக்ஷ்மி விலாஸ் பாங்க் எவ்விதம் உங்களுக்கு உதவ இயலும் என்பதை சிந்தியுங்கள்—உங்கள் மகளுக்காக செலவிட கணிசமான ஒரு தொகை உங்கள் பாங்க் கணக்கில் தயாராக இருக்க வகை செய்யுங்கள்.

உங்களது மகளின் திருமணம் பல ஆண்டுகளுக்குப் பின்பு நடைபெறுவ தாக இருப்பினும் லக்ஷ்மி விலாஸ் பாங்க் சிறப்பாக நடத்த வழி செய்கிறது.



**லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: கரூர் 639 001

நிர்வாக அலுவலகம்: சென்னை 600 086

என்.வி. ஸ்ரீநிவாசன்

சேர்மன்

# பாவத்துக்கு ஒரு பரிகாரம்



ஜே.வி. நாதன்

அலட்சியமாகப் பத்து ரூபாய் நோட்டைச் சரளா நீட்டியபோது, ''முப்பது பைசாவா இருந்தால் கொடும்மா — இல்லாட்டி இறங்கிடு!'' என்று கறாராகச் சொன்னான் கண்டக்டர். அவன் எழுப்பிய விசில் ஒலியில் பஸ்ஸின் வேகம் குறையலாயிற்று.

சரளா தன் அடிவயிற்றில் ஒருவிதக் கலக்கம் தோன்றி நொடியில் உடல் முழுவதும் பரவுவதாக உணர்ந்தாள். இத்தனை பேர் பார்க்கும்போது, பஸ்ஸிலிருந்து இறங்குவது எத்தனை அவமானம் என்னும் உணர்வு அவளைப் பிய்த்தெடுத்த நேரத்தில் ஓர் இனிய குரல் உதவிக்கு வந்தது.

''இஃப் யூ டோண்ட் மைண்ட், உங்களுக்கும் சேர்த்து நான் டிக்கட் வாங்கிவிடட்டுமா?''

—முறுவலித்தபடியே சில்லறையை நீட்டினாள் ஒருத்தி. கண்டக்டரின் மறு விசில் ஒலியில் பஸ், வேகமெடுத்து ஓடத் தொடங்கியது. ''அப்பாடா!'' சரளாவுக்கு அந்த நொடியில் ஒரு பெருமூச்சு; ஆசுவாசம். உதவிக்கரம் நீட்டிய பெண்ணைப் பார்த்தபோது அதிர்ந்து நின்றாள்.

'மாயா அல்லவா இவள்?'

மாயா எளிமையான உடையிலும் பளீரென்று காட்சியளித்தாள். களங்கமில்லாத சிரிப்பு மேலும் அவளுக்கு அழகூட்டியது.

''ஆச்சரியமாக இருக்கிறதல்லவா மிஸ் சரளா? வழக்கமாக வேறு பஸ்ஸில் செல்வேன். இன்று நான் சற்றுத் தாமதமாகக் கிளம்பியதில் இந்த பஸ்... அதுவும் நல்லதாயிற்று — உங்களைச் சந்திக்க முடிந்ததே!''

''நீங்க எந்த ஆபீசில் இருக்கீங்க?''

மாயா சரளாவைப் பார்த்து மெல்லச் சிரித்துவிட்டு, ''நான் இப்போது ஒரு நர்ஸரிப் பள்ளியில் டீச்சர். நாம் ஐந்து மாதங்களுக்கு முன்பு சந்தித்தோமே, அதற்கப்புறம் எனக்கு எங்கிருந்தும் இண்டர்வியூ வரவில்லை'' என்றாள்.

''நர்ஸரிப் பள்ளியிலா? சம்பளம் என்ன கொடுக்கிறார்கள்?''

மாயா பதில் கூறவில்லை. சிரிப்புத்தான் பதிலோ என்னும்படி நகை காட்டினாள்.

''மிஸ் மாயா, நாம் பேட்டிக்குப் போயிருந்தோம் அல்லவா, 'பாரத் எக்ஸ்போர்ட்ஸ்' அந்த ஆபீசிலேயே எனக்கு வேலை கிடைத்தது. அக்கவுண்ட்ஸ் ஆபீஸராக—கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய் சம்பளம். நிறையப் பொறுப்புக்கள்!'' என்று பெருமிதமாக, ஆனால் அலுப்படைபவள் போலச் சொன்னாள் சரளா. ''உங்களுக்குப் பரவாயில்லை. மிஸ் மாயா, சின்னக் குழந்தைகளோடு அவர்களின் மழலைகளோடு... வாழ்க்கை உற்சாகமாக இருக்குமே...?''

விரக்தியாகச் சிரித்தாள் மாயா. பேச்சைத் திசை திருப்பி, ''ஒரு நாள் என் வீட்டுக்கோ அல்லது எங்களது நர்ஸரி பள்ளிக்கோ வாருங்களேன்'' என்றாள்.

''ஓ எஸ்!''

விலாசத்தைக் கேட்டறிந்து விடைபெற்று பஸ்ஸிலிருந்து கீழிறங்கியபோதுதான் மாயா அதிர்ந்து குலுங்கும்படியான அந்த விபத்து சற்றும் எதிர்பாராத விதமாக நிகழ்ந்தது.

படிக்கட்டில் ஒரு கால் வைத்து மறு காலைப் பூமியை நோக்கி நீட்டிச் சரளா இறங்குவதற்குள் பஸ் நகர, தட்டுத் தடுமாறி அவள் தரையில் விழுந்தாள். சாலையோரம் எதற்கோ பதித்திருந்து வெளியில் உயரமாக நீட்டிக் கொண்டிருந்த பாறாங்கல்லில் சரியாக அவள் தலை மோதி இரத்தம் வேகமாகப் பீறிடத் தொடங்கியது.

'ஓ'வென்ற அலறலுடன் பஸ்ஸை நிறுத்தி, பாய்ந்தோடி வந்த மாயா சரளாவின் தலையைத் தாங்கி மடியில் வைத்துக்கொள்ள நொடியில் கூட்டம் சூழ்ந்து 'என்னது?... என்னது?' என்று கேள்வி கேட்க ஆரம்பித்தது.

'பாரத் எக்ஸ்போர்ட்ஸ்' நிறுவனத்தின் நேர்முகப் பேட்டிக்கு அழைக்கப்பட்டு வந்திருந்தவர்கள் இரண்டே பேர்; விண்ணப்பங்கள், புகைப்படங்கள் யாவும் பரிசீலிக்கப்பட்டு இறுதித் தேர்வில் சரளாவும் மாயாவும் அழைக்கப்பட்டிருந்தனர்.

தொள்ளாயிரம் ரூபாய்க்கு மேல் எடுத்த எடுப்பிலேயே சம்பளம் கிடைக்கக்கூடிய நல்ல வேலை. எப்படியும் கிடைத்துவிடும் என்கிற நம்பிக்கை இருவர் மனத்திலும் இருப்பினும் கவலையும் கூடவே இருந்தது. இருப்பதோ ஒரேயொரு பதவி. யாருக்குக் கிடைக்கும்?

நிர்வாகத்துக்கே குழப்பமாக இருந்தது. படிப்பில் இருவருமே ஏறக் குறைய சமமான மதிப்பெண்கள் பெற்றிருந்தனர். தோற்றம் அழகு, கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் பதில் அளித்த விதம் எல்லாவற்றிலும் கிட்டத் தட்ட சமமாக இருந்த இருவரில் யாரை வேலைக்கு நியமிக்கலாம்? ஒரு வாரத்தில் முடிவினைத் தபால் மூலமாகத் தெரிவிப்ப தாகச் சொல்லி யனுப்பினர்கள்.

சரளாவும் மாயாவும் அன்றைக்கு அறி முகம் ஆனவர்கள்தாம். ஒருவரை யொருவர் 'பெஸ்ட் ஆஃப் லக்' என்று வாழ்த்தியபடி பிரிந்தனர்.

மறுதினம் அஞ்சலில் 'பாரத் எக்ஸ் போர்ட்ஸ்' நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டருக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதம் அவர் தலைவலியை இன்னும் கொஞ் சம் அதிகமாக்கிவிட்டதென்றே கூறலாம்.

"மதிப்புக்குரிய ஐயா,

இன்று நேர்முகத் தேர்வுக்கு வந்திருந்த மாயா எழுதுகிறேன். வேலை செய்து சம்பாதித்துத்தான் ஆக வேண்டும் என் கிற நிர்ப்பந்தம் எதுவும் இல்லாத குடும் பத்தைச் சேர்ந்தவள் நான். ஏதோ படித்துவிட்டு வீட்டில் சும்மா பொழுது போக்க வேண்டாமே என்று உங்கள் கம் பெனி விளம்பரத்தைப் பார்த்ததும் விண் ணப்பம் போட்டு வைத்தேன்.

ஒருகால் எனக்கு நீங்கள் வேலை கொடுத்தாலும் கூட விரைவில் நடைபெறவிருக்கும் என து திருமணத்துக்குப் பின் நான் வேலையை ராஜினாமாச் செய்ய விரும்புகிறேன்.

என்னோடு இன்று பேட்டிக்கு வந்திருந்த சரளா பாவம் ஏழைப் பெண்! மூத்தவளான அவளது கையை நம்பித்தான் அவளது பெரிய குடும் பம் இருப்ப தாகத் தெரி கிறது. அந்த ஏழைப் பெண்ணுக் குத்தங்கள் அலுவலகத்தில் பதவி அளிப்பீர்களானால் மகிழ்வேன்.

—மாயா.

எம். டி. குழம்பினர். மாயாவுக்குப் பதவி தரப்பட்டால் திருமணத்துக்குப் பின் அவள் ராஜினாமாச் செய்துவிடலாம் — இன்னொரு இண்டர்வியூ நடத்த வேண்டும். அந்தப் பதவிக்குத் தகுந்தபடி — தோற்றம் — அறிவு எல்லாம் உள்ள பெண்ணாகத் தேட வேண் டும். கடிதப்படி அந்த ஏழைப் பெண் சரளா வுக்கே வேலை தந்துவிடலாமா? இந்தக் கடிதம் கூறுவது உண்மையாக இருக்குமா? பல குழப்பங்கள்.

ஒரு வாரம் சென்றது. சரளாவுக்குப் பணி நியமன உத்தரவு அனுப்பப்பட்டது.

மேலே மின்விசிறி சுழல்வது மங்கலாகத் தெரிந்தது. 'நான் எங்கே இருக்கிறேன்?' சரளா முனகிப் புரண்டாள்.



வெள்ளை உடை நர்ஸ் ஒருத்தி சரளாவின் அருகில் வேகமாக வந்தாள். ''தலையை அசைக்காதீங்க. ஸ்டிச்சர் போட்டிருக்கு. பலமான ஹெட் இன்ஜுரி'' என்று கூறியபடி மணிக்கட்டில் நாடித்துடிப்பைப் பார்த்தாள். தெர்மா மீட்டரை வாயில் செருகினாள்.

டாக்டர் வந்தார். பரிசோதித்துவிட்டுக் கூறினார்: ''அபாய நிலைமை தாண்டியாகி விட்டது. நிறைய ரத்தம் சேதமாகியிருப்பதால் உடம்பு பலவீனமாகியிருக்கு. அவ்வளவுதான். ஓய்வு எடுத்து, புஷ்டியான ஆகாரம் சாப்பிட்டால் சரியாகிவிடும்...''

சரளா சாதாரண நிலைக்குச் சில தினங்களிலேயே திரும்பினாள். மண்டையில் போடப்பட்ட தையலைப் பிரித்தார்கள். இரண்டொரு தினங்களில் 'டிஸ்சார்ஜ்' செய்வதாக டாக்டர் கூறிவிட்டார்.

ஒரு மாலைப் பொழுது.

''ஹலோ, எப்படி இருக்கீங்க மிஸ் சரளா?'' —இனிமையான குரல். நிமிர்ந்து பார்த்தாள். மாயா!

நெஞ்சில் ஒரு பந்து உருண்டையாய் அடைத்துக் கொண்டது. அருகில் வந்த மாயாவின் கைகளைப் பற்றிக் கண்ணில் ஒற்றிக்கொண்டு அழத் தொடங்கினாள் சரளா.

''மாயா! நீங்க என்னைக் கொண்டு வந்து அட்மிட் செய்தீங்க. அவசரத்துக்கு உங்க ரத்தத்தையும் கொடுத்து உதவியிருக்கீங்க. என் அலுவலகத்துக்குப் போன் செய்து வீட்டு விலாசம் கண்டுபிடித்து விவரம் தெரிவித்து... அப்பப்பா! நான் இன்னிக்கு உயிரோடு இருக்கிறேன் என்றால் நீங்கதான் இதற்குக் காரணம்... நீங்க ரொம்ப உயர்ந்தவர் மிஸ் மாயா!''

''காம் டௌன் மிஸ் சரளா! உணர்ச்சி வசப்பட்டு ஏதேதோ சொல்றீங்க. ஆபத்துச் சமயத்தில் யாராக இருந்தாலும் செய்கிற சாதாரணக் கடமைகளைத்தான் நான் செய்தேன். அவற்றைப் பெரிசு படுத்தறது தப்பு!''

''பெரிசு படுத்துகிறேனா?... இல்லை மாயா! நான் உள்ளதைத்தான் சொல்கிறேன். நீங்க என் உயிரையே மீட்டுக் கொடுத்திருக்கீங்க... ஆனால் நான் உங்களுக்கு என்ன செய்தேன் தெரியுமா — பச்சைத் துரோகம்! இப்போது நான் பார்க்கும் உத்தியோகம் இருக்கே, அது நியாயமாக நீங்க பார்க்க வேண்டியது. நாமிருவரும் இண்டர்வியூவுக்குப் போய்விட்டு வந்தோமே அன்று பிற்பகல் நீங்க எழுதின மாதிரி நான் ஒரு கடிதம் எழுதி 'பாரத் எக்ஸ்போர்ட்ஸ்' எம். டி.க்கு அனுப்பினேன். அந்தக் கடிதத்தில்...''

மாயா நிதானமாகக் குறுக்கிட்டுச் சொன்னாள்: ''நான் பணக்காரப் பெண். திருமணமானதும் வேலையை ராஜினாமாச் செய்துவிட இருக்கிறேன். ஏழைப் பெண் சரளாவுக்கு அந்த வேலையைக் கொடுத்தால் அவளின் பெரிய குடும்பத்துக்குப் பேருதவியாக இருக்கும்... இந்த மாதிரி சரளாவாகிய நீங்கள் மாயா என்ற நான் எழுதுவது போல் கடிதம் எழுதினீர்கள் — அதன்படி உங்களுக்கு வேலை கிடைத்தது. சரிதானே?''

தூக்கி வாரிப் போட்டது சரளாவுக்கு. ''அது...அது... உங்களுக்கு...?''

''எப்படித் தெரிந்தது என்று கேட்கிறீர்களா? சொல்கிறேன். இண்டர்வியூ நடந்த நாலாவது தினம் என்னை நேரில் வரச் சொல்லி ஒரு கடிதம் அந்தக் கம்பெனியிலிருந்து வரவே நான் சென்றேன். உங்கள் கடிதத்தை என்னிடம் கொடுத்து நான் எழுதியதுதானா என்று கேட்டார்கள். படித்த பொழுது உங்கள் குயுக்தியான கருத்து புரிய வந்தது. அதை நான் எழுதவில்லை என்று கூறியிருந்தால் எனக்கு அந்த வேலை கிட்டியிருக்கலாம். ஆனால் யோசித்தேன். குடும்பக் கஷ்டம் எனக்குப் பழக்கமானதுதான். உங்களுக்கு என்ன கஷ்டமோ, பாவம், வேலை கிடைப்பதற்காக இந்த மாதிரி ஒரு முறையைக் கையாண்டிருக்கிறீர்கள் என்று நினைத்துக்கொண்டேன். அந்தக் கடிதத்தை நான்தான் எழுதியதாகவும், வேலையை உங்களுக்கே தருமாறும் சிபாரிசு செய்துவிட்டுத் திரும்பிவிட்டேன்.''

பேச வாய் வராமல் கண்களில் நீர் பெருகி வழிய அமர்ந்திருந்தாள் சரளா. திடுமென ஆவேசம் வந்தவள் போன்று பேசினாள்:

''என் சதிச் செயல்கள் தெரிந்த பிறகுமா காட்டிக் கொடுக்காமல் எனக்கே வேலை கிடைக்கச் செய்துவிட்டுத் திரும்பினீர்கள்? பஸ்ஸில் சில்லறை கொடுத்து உதவினீர்கள்? மண்டை உடைபட்டுக் கிடந்தவளைத் தூக்கி வந்து சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தீர்கள்? இரத்தம் கொடுத்துக் காப்பாற்றினீர்கள்? மாயா! உங்கள் முன்னே நிற்கவே அருகதையற்ற புழுதி நான். எனக்கு மன்னிப்பே கிடையாது! இப்போதே எங்கள் எம். டி.யிடம் உண்மையைச் சொல்லப் போகிறேன். காலில் விழுந்தாவது அந்த வேலையை உங்களுக்கு வாங்கித் தந்தால்தான் என் பாவங்களுக்கு நிவர்த்தி கிட்டும்!'' — புலம்பினாள் சரளா.

மாயா எழுந்தாள். ''மிஸ் சரளா! பாவங்களுக்கான பரிகாரமும், நான் செய்த உதவிகளும் பரஸ்பரம் ஒரு பண்டமாற்று வியாபாரமாகிப் போவதை நான் விரும்பவில்லை. வெட் காட் ப்ளெஸ் யூ!''

மெல்ல நடந்து அறையினின்று வெளியேறும் மாயாவை ஒரு சிலை போல் அமர்ந்து வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் சரளா.

''நாளைலேந்து வழக்கமா போடுற பத்து காசுடன் கட்டாய போனஸ் 5 காசு போட்டாத்தான் வாங்குவேன்...''

## 14

நீ எனக்குத் தாகவெறி தந்தாய்;
பிறகுதான்—
என் இதயம்
வறண்ட நிலமாய்க் கிடந்தது
எனக்குப் புரிந்தது.
—மீரா: ''கனவுகள், + கற்
பனைகள், = காகிதங்கள்''

''ஆமாம்'' என்றான் ராஜீவ். ''ஒரு ஃப்ரெண்ட் வீட்டிலே ஒரு சினிமா டைரக்டர் என்னைப்பார்த் தாரு. 'என்னுடைய அடுத்த தயாரிப்பிலே நடிக்கிறியா'ன்னு கேட்டாரு. முதல்லே என்னைக் கேலி செய்யறார்னு நினைச்சேன். பட், ஹி வாஸ் சீரியஸ். நானும் ஒத்துக் கிட்டேன். அதுக்கு அப்புறம், தேர் வாஸ் நோ லுக்கிங் பேக். பெரிய நட்சத்திரம் ஆயிட்டேன்.''

''நீங்க சினிமா நடிகரா பிரபலமானதும் உங்க மனைவி நிச்சயம் அதைப் பத்திக் கேள்விப்பட்டிருப்பாங்களே. அதுக்குப் பிறகு எப்போதாவது உங்களைக் காண்டேக்ட் பண்ண முயற்சி செய்தாங்களா?'' என்று உஷா கேட்டாள்.

''இல்லே. நாட் ஈவன் ஒன்ஸ். விடு உஷா, இன்னும் ஏன் அவளைப் பத்தியே பேசிக்கிட்டு இருக்கணும்? ஷீ இஸ் நாட் வர்த் ஸோ மச் டிஸ்கஷன். இருந்தாலும் அப்போ நானும் இளைஞன். வாழ்க்கையிலே என்னுடைய முதல் அனுபவமே இவ்வளவு கசப்பாக அமையவே; பெண்கள் இடத்திலே எனக்கும் ஒருவிதமான கசப்பு உணர்வு, ஒரு வெறுப்பு உண்டாயிடுச்சு. வெறுப்புன்னா, அவங்களோட பழகவே கூடாதுங்குற மாதிரி வெறுப்பு இல்லே. பட், பெண்களை சீரியஸா எடுத்துக்கக் கூடாதுன்னு முடிவு செய்தேன். ஒரு பெண் கிட்டே சின்சியரா இருக்கிறது; அவ மேலே உண்மையான அன்பைச் செலுத்தறது; ஒரு பெண்ணிடம் ஆழமான உறவை வளர்த்துக்கறது— இதெல்லாம் கண்மூடித்தனம்; முட்டாள்தனம்; வேஸ்ட் அப்படீன்னு கருத ஆரம்பிச்சேன்.

''உஷா, உன்கிட்டே எதையும் மறைக்காமே சொல்றேன். அதுக்கப்புறம் எத்தனையோ பெண்கள் கூடப் பழகினேன். ஆனா அவங்களை வெறும் விளையாட்டுப் பொருளாகத்தான் நடத்தினேன். அவங்களும் என்கிட்டேயிருந்து கிடைக்கக் கூடிய லாபத்துக்காக என்னோட பழகினாங்களே தவிர, யாரும் என்னிடம் உண்மையான அன்பைச் செலுத்தவில்லை. எப்படியோ, என் சொந்த வாழ்க்கையைப் பொருத்த வரைக்கும் இப்படியே இருந்திடலாம், கல்யாணம் என்கிற பேச்சுக்கே இனி என் லைஃப்லே இடமில்லேன்னு நினைச்சுக்கிட்டு இருந்தேன். அன்டில்....'' என்று நிறுத்தினான்.

''அன்டில்?'' கண்களில் கேள்விக் குறியோடு உஷா அவனைப் பார்த்தாள்.

ராஜீவ் அவளைத் தன் அருகில் இழுத்துக் கொண்டான். ஒரு கையால் அவள் மெல்லிய தோள்களை வளைத்துத் தன் நெஞ்சோடு இறுக அவளை அணைத்தபடி, இன்னொரு கையின் ஆள்காட்டி விரலை அவள் முகவாய்க் கட்டையின் அடியில் வைத்து, அவள் முகத்தை மெல்லப் பின்னுக்குச் சாய்த்தான். அவள் கண்கள் நேராக அவன் கண்களுக்குள் விழித்தன. அவள் உதடுகளுக்கும் அவன் உதடுகளுக்கும் இடையே சற்றே இடைவெளி இருந்தது. ''அன்டில் ஐ மெட் யூ!'' என்றான் ராஜீவ், தாழ்ந்த கரகரத்துப்போன குரலில். ''உன்னைச் சந்திச்சதும், என் முடிவை மாத்திக்கிட்டேன் உஷா.''

ஆனந்தம் தாண்டவம் ஆடும் விழிகளோடு உஷா அவனைப் பார்த்தாள். ''ராஜீவ் என்ன சொல்றீங்க? டு யு மீன்.....?''



''யெஸ் உஷா. ஐ வாண்ட் டு மேரி யூ! உன்னை என் மனைவியாக்கிக் கொள்ள விரும்பறேன். உன்னை எனக்கே சொந்தம் ஆக்கிக்கொள்ள விரும்பறேன். உஷா, நீ என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறியா? உன் கணவன் ஆகிற பெருமையை எனக்குத் தரச் சம்மதிக்கிறியா?''

''ஓ ராஜீவ்! ஓ மை டார்லிங்!'' இருவருடைய உதடுகளும் சந்தித்து உணர்ச்சி ததும்பும் இணைப்பில் வெகு நேரம் நீடித்தன.

மூச்சு வாங்கியபடியே, ''ராஜீவ், இப்ப நீங்க சொன்னீங்களே... உண்மையாத் தான் சொன்னீங்களா... இல்லே... அதை நான் கற்பனை செய்தேனா?'' என்று கேட்டாள் உஷா.

''உண்மையாத்தான் சொன்னேன் டார்லிங்! ஐ மென்ட் எவ்ரி வர்ட் அஃப் இட்!'' அவள் கூந்தலில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டான் அவன். ''உஷா! இனிமே நீ இல்லாமே நான் இல்லே. நீ இல்லாத வாழ்க்கை எனக்குத் தேவையுமில்லே. நீ இல்லேன்னா, இந்தச் சொத்து, சுகம், அந்தஸ்து, பேரு, புகழ் — எதுவுமே எனக்கு வேண்டாம்!''

''ராஜீவ்.....!''

''ஆமாம் உஷா! சத்தியமாச் சொல்றேன். பகிரங்கமா, வெளிப்படையா, பெருமையோடா... நீதான் என் மனைவின்னு இந்த உலகத்துக்கு அறிவிக்கணும்னு ஆசைப்படறேன். எப்போதும் நீ என் பக்கத்திலேயே இருக்கணும்னு விரும்பறேன். ஒரு நிமிஷம் கூட உன்னைப் பிரிஞ்சு நான் இருக்க விரும்பலே. எல்லா இடங்களுக்கும், நான் கலந்துக்கிற எல்லாப் பொது நிகழ்ச்சிகளுக்கும், நான் போற எல்லா ஊர்களுக்கும், தைரியமாக, மனைவிங்கிற அந்தஸ்தோட, பரிபூரண உரிமையோட உன்னையும் என் கூடவே அழைச்சுக்கிட்டுப் போகப் பிரியப்படறேன். போதும் இந்தத் திருட்டுத்தனமான சந்திப்புக்கள்! பயந்து — பயந்து நாம ஏன் இப்படி வாழ வேண்டும்? நாம யாருக்குப் பயப்படணும்? எதுக்காகப் பயப்படணும்? எதுக்கு இன்னும் இந்தத் திருட்டு வாழ்க்கை? நமக்குள்ளே இனி எந்தத் தடையும் இல்லாமே செய்துடறேன். வா! உன்னை இப்பவே, இன்னைக்கே கல்யாணம் பண்ணிக்கிறேன்! இனி ஒரு நாள் கூட உன்னைப் பிரிஞ்சு நான் இருக்க மாட்டேன். இப்பவே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யறேன்!''

உஷாவின் முகம் சற்றே மாறியது. ''ராஜீவ்....டார்லிங்... எனக்கும் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கணும்னுதான் ஆசையாயிருக்கு. ஆனா....''

ராஜீவின் புருவங்கள் சுருங்கின. ''ஆனா என்ன?''

சற்றுத் தயக்கத்துடன் உஷா நிதானமாகப் பதில் சொன்னாள். ''ராஜீவ்...எங்க அம்மாவை நினைக்கும்போது... எனக்குப் பயமாக இருக்கு. இந்த விஷயம் அம்மாவுக்குத் தெரிஞ்சா, என்ன சொல்வாங்களோ தெரியாது.....''

ராஜீவுடைய முகம் தெளிவு அடைந்தது. ''அவ்வளவுதானா? நான் என்னவோ ஏதோன்னு பயந்துட்டேன்! கவலைப் படாதே உஷா. தானே நேரிலே உங்க அம்மாவைச் சந்திக்க, விஷயத்தைப் பிட்டு வைச்சு, உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முறைப்படி அவங்க அனுமதியைக் கேட்டு வாங்கிடறேன்.''

---

மகன் பில்லி அழைத்துக் கொண்டால் வியப்பில்லை. ''க்ராமர் vs க்ராமர்'' என்ற படத்தில் தாயும் தந்தையும் பிரிந்து விவாகரத்து கோருகிறார்கள். ஆனால் இருவருக்குமே மகன் பில்லி க்ராமரிடம் அன்பு. யார் அவனை அடைவது என்பதில் போட்டி!

**''இந்த அம்மாவும் அப்பாவும் ஏன் தான் இப்படி சண்டை போட்டுக் கிட்டாங்களோ!''**



26 நியூயார்க் பள்ளிக் கூடங்களை அலசி சிறுவன் ஜஸ்டின் ஹென்றியைக் கண்டு பிடித்தார்கள். படத்தில் பில்லி க்ராமராக நடிக்க. தந்தை க்ராமராக நடிக்கும் டஸ்டின் ஹாஃப்மன் இன்று மிகப் பிரபலமாகி வரும் நட்சத்திரம். அவரைச் சந்திக்கத் திருப்புங்கள்

24ம் பக்கம்.



''ஏன்னு, எங்கம்மாவை உங்க ஸ்கூட்டர்லே ஏத்திக்கிட்டுப் போய் பஜார்லே அவ விழுந்துட்டா ளாமே!''

''நீதானே அவளே பஜார்லே 'டிராப்' பண்ணச் சொன்னே!..'' - ஜி. நடராஜன்

அத்தனை நம்பிக்கையுடன், உறுதியுடன் அவன் பேசியபோதிலும் உஷாவுக்கு இன்னும் நம்பிக்கை வந்ததாகத் தெரியவில்லை. ''இல்லே ராஜீவ். நீங்க நினைக்கிற மாதிரி அது அவ்வளவு சுலபமான காரியமில்லே. உங்களுக்கு எங்க அம்மாவைப் பத்தித் தெரியாது. அவங்களை அவ்வளவு லேசுலே எதுக்கும் ஒப்ப வைக்க முடியாது. அம்மாவுக்குப் பிடிவாதம் ரொம்ப அதிகம்.''

''எனக்கும் பிடிவாதம் ரொம்ப ரொம்ப அதிகம்!'' கோபமாக ராஜீவ் சுருக்கென்று திருப்பிச் சொன்னான். ''நான் ஒரு முடிவுக்கு வந்த பிறகு, கடவுளே குறுக்கே வந்தாலும் நான் நினைச்சதைச் சாதிக்காமே விடமாட்டேன். உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதா நான் தீர்மானம் செய்தாச்சு. உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டே தீருவேன்! இதை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. தடுக்கவும் விடமாட்டேன். நம்ம கல்யாணத்தை யார், எப்படித் தடுக்கறாங்கன்னு நானும் பார்த்துடறேன்!'' கோபத்தில் அவன் உதடுகள் ஒன்றோடு ஒன்று இறுகிப்போய் ஒரு மெல்லிசான கோடுபோல் காட்சி அளித்தன. ''இன்னைக்கே கார்லே ஸ்ரீரங்கத்துக்குப் புறப்படுவோம். உங்க அம்மாவைப் பார்த்து, அவுங்க அனுமதியைப் பெற்று உடனே கல்யாணம் பண்ணிக்கலாம்.''

மென்மையாக அவனைப் பார்த்தாள். அருகில் சென்று அவன் கன்னத்தை அன்பாக வருடி விட்டாள். ''ராஜீவ், யூ ஆர் நத்திங் பட் எ பிக் பேபி! குழந்தை மாதிரி கோவிச்சுக்காதீங்க. கொஞ்சம் நிதானமா இந்தச் செய்தியை அம்மாவுக்குத் தெரியப்படுத்தலாம்னுதான் சொல்றேன். ஒரே அடியா திமர்னு அம்மாவுக்கு ஓர் அதிர்ச்சியை உண்டாக்க வேண்டாம்னு நினைக்கிறேன். அதுக்குக் காரணம் இருக்கு'' என்றாள்.

ராஜீவ் சமாதானம் அடையவில்லை.

''என்ன காரணம்?'' என்று கேட்டான், எரிச்சலுடன்.

''ப்ளீஸ் ராஜீவ், கோபப்படாமே நான் சொல்றதைக் கேளுங்க. நான் ரொம்பச் சின்னக் குழந்தையா இருக்கும்போதே, எனக்கு விவரம் தெரியறதுக்கு முன்னாலேயே எங்க அப்பா இறந்து போயிட்டார்'' என்றாள் உஷா.

''உம், அதனாலே? அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டான் ராஜீவ்.

''இருக்கு. அப்போதிருந்தே அம்மா என்னைச் சுற்றியே அவங்க உலகத்தை அமைச்சுக்கிட்டாங்க. என்னைத் தவிர அம்மாவுக்கு லைஃப்லே வேறே எந்த இன்ட்ரெஸ்டும் கிடையாது. அம்மா எங்க அப்பாவை ரொம்ப ஆழமா நேசிச்சு இருக்கணும்னு நினைக்கிறேன். அதனாலே தானோ என்னவோ அவர் மறைவுக்குப் பிறகு, அம்மா உலகத்தை முழுமையா வெறுத்திட்டாங்க. எப்பவும் வெள்ளைப் புடவைதான் உடுத்துவாங்க. வெளியே எங்கேயும் போக மாட்டாங்க. எனக்குத் தெரிஞ்சு எங்களுக்கு உறவுக்காரங்க யாருமில்லை. வேலைக்காரங்களைத் தவிர வீட்டிலே வேறே யாருமே இல்லே. அம்மாவுக்குப் பேச்சுத் துணைக்குக் கூட ஆள் இல்லே. சுருக்கமா சொல்லப்போனா என்னைவிட்டா அம்மாவுக்கு வேறு யாருமே இல்லே. நான் விடுமுறை நாட்களிலே எப்போ ஸ்ரீரங்கத்துக்கு வருவேன்னு ஏக்கத்தோட காத்துக்கிட்டு இருப்பாங்க.''

''எப்படி உன்னை இவ்வளவு தூரம் மெட்ராஸுக்கு அனுப்பச் சம்மதிச்சாங்க?'' என்று ராஜீவ் கேட்டான்.

''அதை ஏன் கேட்கிறீங்க அம்மா லேசுலே ஒத்துக்கலே. பள்ளிக்கூடம் வரைக்கும் திருச்சியிலேதான் படிச்சேன். காலேஜ் படிப்புக்கு மெட்ராஸ் வந்தே தீருவேன்னு அடம் பிடிச்சேன். அழுதேன். நாலு நாட்கள் உண்ணா விரதம் இருந்தேன். அப்புறம், பூர்ணிமாவோட அம்மா-அப்பா தைரியம் கொடுக்கவே என்னை இங்கே அனுப்பச் சம்மதிச்சாங்க. பூர்ணிமாவோட அம்மா-அப்பா, அவங்க வீட்டிலேயே நான் தங்கலாம்னு சொன்னாங்க. ஹாஸ்டல்லே இருந்தால் இன்னும் பாதுகாப்பா இருக்கும்னு அம்மாதான் ஹாஸ்டல்லேயே தங்கணும்னு கண்டிஷன் போட்டாங்க. எனக்கும் அம்மாவைத் தனியா விட்டுட்டு வர மனசு என்னவோ போல இருந்தது. நீயும் மெட்ராஸுக்கு வாயேம்மா, அங்கே ஒரு வீடு வாடகைக்கு எடுத்துக்கிட்டு என் கூடவே இருக்கலாமேன்னு கேட்டுப் பார்த்தேன். ஆனா, அம்மா ஸ்ரீரங்கத்தை விட்டு வர மறுத்துட்டாங்க. அம்மா எங்கேயும் போறதில்லே. அவங்க அங்கே தன்னந் தனியா இருக்கிறதை நினைக்கும்போது, மனசுக்குக் கஷ்டமா இருக்கு'' என்றாள் உஷா.

ராஜீவ் பரிவோடு உஷாவைப் பார்த்தான். ''இப்போது புரியுது உஷா. என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா, இவ்வளவு அன்பா உன்னை வளர்த்த அம்மாவை நிரந்தரமாக விட்டுட வேண்டியிருக்குமேன்னு வருத்தப்படறே இல்லே? அந்தக் கவலையே உனக்கு வேண்டாம். உங்க அம்மா ஏன் அங்கே தனியா இருக்கணும்? நம்ம கல்யாணத்துக்கு அப்புறம், அவங்க இங்கேயே, இந்த வீட்டிலேயே நம்ம கூடவே இருக்கட்டுமே? நான் வேண்டாம்னு சொல்லப் போறேன்?'' என்றான்.

''அது நடக்காது ராஜீவ். அம்மாவை உங்களுக்குத் தெரியாது. அதனாலேதான் இப்படிப் பேசறீங்க. அம்மா ஒரு ஸ்ட்ரேஞ்ச் டைப். அவங்க மனசை யாராலும் மாத்த முடியாது. நிச்சயமா அவங்க ஸ்ரீரங்கத்தை

விட்டு மெட்ராஸுக்கு வர ஒத்துக்கவே மாட்டாங்க. இது உங்களுக்கு விநோதமாப் படலாம். ஆனா, இதுக்கெல்லாம் காரணம் அப்பாவோட இழப்பினாலே ஏற்பட்ட சோகம் இன்னும் அம்மாவுக்குத் தீரலேன்னு நினைக்கிறேன். எனக்கு அப்பா ஞாபகமே இல்லே. அவரைப் பத்தி ஏதாவது கேள்வி கேட்டால் கூட, அம்மா பதிலே சொல்ல மாட்டாங்க. அவரைப் பத்தி நினைக்கும்போது, அவரைப் பத்திப் பேசும்போது, அவங்களுக்குத் துக்கம் தாளாதோ என்னவோ. அவரைப் பத்திப் பேச மாட்டாங்க. அவங்க மனசைப் புண்படுத்த வேண்டாம்னு நானும் கேட்கிறதை விட்டுட்டேன்.''

ராஜீவ் திடீரென்று முழுமையாகப் பொறுமையை இழந்தான். சடாரென்று எழுந்தான். ஆத்திரத்தில் ஒரு டீப்பாயை எட்டி உதைத்தான். அது பறந்து சென்று அறையின் மறுகோடியில் போய்ச் சுவரில் மோதிச் சிதறியது. அந்த உதைக்குப் பின்னால் அத்தனை பலமும் கோபமும் இருந்தது. கூண்டில் அடைக்கப் பட்ட சிங்கம் போல அறையைச் சுற்றி வேகமாக நடக்க ஆரம்பித்தான்.

''டு ஹெல் வித் இட்! உஷா, நீ என் பொறுமையை ரொம்பச் சோதிக்கிறே! அப்புறம் என்னதான் செய்ய உத்தேசம்? இப்படியே இருந்திடலாம்னு சொல்றியா? இந்தத் திருட்டு வாழ்க்கையே உனக்குத் திருப்தியா இருக்கா? என்ன தலையெழுத்து இது? குற்றவாளிகள் மாதிரி, திருடர்கள் மாதிரி, ஊருக்குப் பயந்து, உலகத்துக்குப் பயந்து, காலேஜ் அதிகாரிகளுக்குப் பயந்து— சே! என்ன வாழ்க்கை இது! இந்தப் பாழாப் போன கடிகாரம் வேறே எதிரியாவே என் கண்ணுக்குத் தெரியுது. மணி 5-30 அடிச்சா நீ போயாகணும்! மறுபடியும் அடுத்த வாரம் வரைக்கும் காத்திருக்கணும். ஏன்? இந்தச் சனிக்கிழமை, ஞாயிற்றுக் கிழமைதான் நமக்குக் கதியா? ஒளிஞ்சுக்கிட்டு, மறைஞ்சுக்கிட்டு என்னைத் திருட்டுத்தனமா நீ இப்படிச் சந்திக்க வரது அவசியம்தானா? என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, சகல உரிமையோடு, ரைட் ராயலா மகாராணி மாதிரி நீ இங்கே ராஜாங்கம் நடத்தறதைவிட்டுட்டு— எதுக்கு இந்த ஒளிவு மறைவு?''

உஷா மென்மையோடு அவனைப் பார்த்து முறுவலித்தாள். அவனைப் படுக்கையில் படுக்கச் செய்து, அவன் தலையைத் தன் மடிமீது வைத்துக் கொண்டாள். மிருதுவான தனது விரல்களால், அவன் அடர்த்தியான தலைமுடியைக் கோதிக் கொடுத்தாள். அந்த இன்பத்தில் தன்னை மறந்தவனாகக் கண்களை மூடிக்கொண்டு, சில நிமிஷங்கள் ராஜீவ் அப்படியே மௌனமாகப் படுத்திருந்தான். என்ன இன்பம்! என்ன சுகம்! எவ்வளவு இனிமையானவள் இந்த உஷா! வேண்டுமென்று பிரயத்தனப்பட்டாலும் ஓரிரு நிமிஷங்களுக்கு மேல் இந்த அன்புத் தேவதையிடம் கோபம் நீடிக்கவில்லையே!

''ராஜீவ்....'' என்று மெதுவாக ஆரம்பித்தாள் உஷா, சிறிது நேரம் கழித்து.

''ம்?''

''இந்த வருடம் செகண்ட் செமெஸ்டர் முடியப் போகுது. இன்னும் ஒரு மாசத்துக்குள்ளே பரீட்சை நடக்கப் போகுது.''

''ம்.''

''பரீட்சை எழுதி முடிந்ததும் எப்படியும் காலேஜ் மூடுவாங்க. நான் எப்படியும் ஊருக்குப் போகணும். ராஜீவ்... நான் சொல்ல வந்தது.... முதல்லே நான் ஊருக்குப் போறேன். நிதானமா நம்ம விஷயத்தை அம்மாவுக்குச் சொல்லி அவங்களைத் தயார் படுத்தி வைக்கிறேன். திடீர்னு அம்மாவுக்கு ஒரு ஷாக் கொடுக்கிறதை விட அப்படிச் செய்யறது நல்லதுன்னு நினைக்கிறேன். நான் அம்மா கிட்டே ஜெண்டிலா விஷயத்தைச் சொல்லி வைக்கிறேன். அப்புறம் ஒரு வாரம் கழிச்சு, நீங்க ஸ்ரீரங்கத்துக்கு வந்து அம்மாவோட பேசுங்க. அப்போ எல்லாம் சரியாப் போயிடும். இதைத்தான் சொல்லணும்னு நினைச்சுக்கிட்டு இருந்தேன். அதுக்குள்ளே ஆத்திரப்பட்டுச் சீறி விழுந்தீங்க!''

''ஐ ஆம் ஸாரி ஸ்வீட் ஹார்ட்! ஐ லவ் யூ ஸோ மச்! அதனாலேதான் அப்படி ஆத்திரப் பட்டுட்டேன்!''

''ராஜீவ்... உங்க வாழ்க்கையிலே நான் முதல் பெண்ணாக இருந்திருக்க முடியாது. இடையிலே ஒருத்தியாகவும் நான் இருக்க விரும்பலே. பட் ராஜீவ்... உங்க வாழ்க்கையிலே கடைசிப் பெண்ணாக நான் இருக்க விரும்பறேன். அதிலேதான் எனக்கு மகிழ்ச்சி பெருமை, திருப்தி — எல்லாமே!''

''உஷா! யு வில் பீ தி லாஸ்ட் கர்ல் இன் மை லைஃப். யு வில் பீ தி ஒன்லி கர்ல் இன் மை லைஃப் ஹியர் ஆஃப்டர். இது சத்தியம்!''

''தேங்க் யூ டார்லிங். அது போதும் எனக்கு. வேறே எதுவுமே எனக்கு வேண்டாம்!'' என்றாள் உஷா. (தொடரும்)




குணசித்திர நடிகர் டஸ்டின் ஹாஃப்மனின் இருவித தோற்றங்கள். 1 : 'க்ராமர்' 2 பேப்பிலான் (பட்டாம்பூச்சி).

— சித்தி




# இன்றைய உயர்சக்தி ஸ்டீரியோ ஸிஸ்டங்களில்
# விட்டுப்போன இணைப்பு



## ...ஒரு ஹை-ஃபிடிலிடி, ஹை பர்ஃபார்மன்ஸ் ரெகார்டு பிளேயர். ஆனால் இப்போது, பிலிப்ஸ் ஜீஏ 242 மூலம், முன்பு விட்டுப் போனதைக் கேட்டு மகிழுங்கள்.

ஒரு மியூஸிக் ஸிஸ்டத்தில் மிக முக்கியமான ஓர் இணைப்பு ரெகார்டு பிளேயர் ...ஏனெனில் அங்குதான் இசையே தோன்றுகிறது. இப்போது பிலிப்ஸ் ஜீஏ 242-ஐப் பாருங்கள். அது ஹை-ஃபையில் DIN 45500 தரத்தைத் தாண்டி விட்டது. அதில் தொழில்துறை சிறப்புகள் உள்ளதால், ஒலிக் குலைவு அறவே தவிர்க்கப் படுகின்றது.

**பெல்ட் ட்ரைவ் :** தொழில்நுட்ப ரீதியில் மிகச் சிறப்பான ட்ரான்ஸ்மிஷன் ஸிஸ்டம் கொண்டதால், மோட்டாரின் அதிர்ச்சிகளை எல்லாம் தாங்கிக் கொள்ளுகிறது.

**ஃப்ளோடிங் ஸஸ்பென்ஷன் :** டர்ன்டேபிள், பிக்-அப்-ஆர்ம் ஆகியவை மெல்லிய ஸ்ப்ரிங்குகளின்மீது 'மிதப்பதால்', மோட்டார் அஸெம்ப்ளியிலிருந்து தனித்துஉள்ளன. எனவே ஒலி சம்பந்தப்பட்ட ஃபீட்பேக் தவிர்க்கப்படுகின்றது.

**எலெக்ட்ரானிக் மூளை :** இது ஜீஏ 242-ன் மோட்டாரைக் கட்டுப்படுத்துவதால், வோல்டேஜ், ஃப்ரீக்வன்ஸி மற்றும் தட்பவெப்ப நிலையில் மாறுபாடுகள் இருந்தாலும், சரியான வேகத்தை உறுதி செய்கிறது. தவிர, 1 கிலோ எடையுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சுழல் தட்டு சக்தி வாய்ந்த வகையில் சமனிலைப் படுத்தப்பட்டுள்ளதால், அது வேகத்திலுள்ள சின்னஞ் சிறிய மாறுபாடுகளுக்கும் ஈடுகொடுக்கிறது. (wow and flutter <.12%)

**சூபர் பி ஹை-ஃபை கார்ட்ரிஜ் :** முழு ஃப்ரீக்வன்ஸியையும் கச்சிதமாகப் பிரதிபலிக்கச் செய்து (20 Hz—20 KHz) தெள்ளத் தெளிவான சிறந்த ஒலி தருகின்றது.

**ஹைட்ராலிக் க்யூயிங் :** பிக்-அப் ஆர்ம் இறகுபோல் மெதுவாக இறங்க. இந்த ஆர்ம் மிகவும் லேசாக ரெகார்டில் அழுந்துகிறது. (1.5 முதல் 3 கிராம் வரை சரிசெய்து கொள்ளலாம்) அதோடு, ரெகார்டு அனுவசியமாகத் தேயாமல் இருக்க, உள்ளமைந்த, சறுக்காத வசதி உண்டு.



OBM/3003 TM




**பிலிப்ஸ் எலெக்ட்ரானிக் ஹை-ஃபை ஸ்டீரியோ டர்ன்டேபிள் ஜீஏ 242**

**பிலிப்ஸ்**

பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

''ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவின் துன்பங்களிலிருந்து விரைவில் நிவாரணம் பெற அனாஸின் பெரிதும் உதவுகிறது'' என்கிறார் நர்ஸ் நாட்டாலியா டிசௌஸா.



**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ, சத்துக்குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப் பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும், இருமல், தொண்டைப் புண், பசியின்மை, உடல் சோர்வு தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும், சுவாச கோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம் ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள், ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்யவேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
**அனாஸின்***

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd. TM

A24-6/79.

ஜனநாயகமும் சோஷலிஸமும் ஒரு முடிவை அடைவதற்கான வழிகள். அவையேதாம் முடிவு என்று எண்ணி விடலாகாது.

சில குறைகள் இருப்பினும் ஜனநாயகமே சிறந்தது என்கிறேன். ஏனெனில் மற்ற அரசியல் முறைகளெல்லாம் இதை விட மோசமானவை. - ஜவாஹர்லால் நேரு

# சட்ட மன்றத்தில் புது முகங்கள்



### ஜே. சி. டி. பிரபாகரன்

(அ.இ.அ.தி.மு.க.) வில்லிவாக்கம் தொகுதி

சிறந்த வழக்கறிஞரான இவர், லயோலா கல்லூரியின் மாணவர் தலைவராக இருந்த போது, மதிய உணவுத் திட்டத்தை ஏழை மாணவர்களுக்கு ஏற்படுத்தித் தந்தார். அப்போதுதான் இவர் புரட்சித் தலைவரைச் சந்தித்தார். 'கல்லூரியில் கூட மதிய உணவிற்கு சிரமப்படும் அளவுக்கு ஏழை மாணவர்கள் இருக்கிறார்களா?' எனப் புரட்சித் தலைவர் இவரைக் கேட்டாராம். உடனே ஜே.சி.டி. 'பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் திட்டப்படி மதிய உணவுத் திட்டத்தால் பள்ளியில் படித்து வெற்றிபெற்ற மாணவர்கள் கல்லூரியில் மதிய உணவுக்கு என்ன செய்வார்கள்?' என்று போட்டாராம் ஒரு போடு. உடனே இருக்கையை விட்டு எழுந்து இவரைக் கட்டி அணைத்து மகிழ்ச்சியுடன் ரூ. 10,000த்துக்கான காசோலையை இன்றைய முதல்வர் வழங்கினார்.

தேர்தல் பிரசாரத்தின்போது எப்படி மக்களைச் சந்தித்தாரோ அதே போல் தேர்தலுக்குப் பிறகும் மக்களைச் சந்தித்து நன்றி கூறியதோடு நிற்காமல் தம் தொகுதியின் எல்லா ஊர்களிலும் ஒரு பொது இடத்தில் மக்களைக் கூட்டிக் குறைகளைக் கேட்கிறார்.





### ஏ. சி. சண்முகம்

(அ.இ.அ.தி.மு.க.) ஆரணி தொகுதி

திருச்சி லிஸ்வ் ஹாஸ்டல் மாணவர் போராட்டங்களுக்கு இவர் பின்னணியில் இருந்து புரட்சித் திட்டங்கள் வகுத்தவர். சாத்த ஊரில் ஒரு மாணவர் பயிற்சிமுகாமை நடத்தியது தம் வாழ்வில் மறக்க இயலாத சம்பவமாக இவர் கருதுகிறார்.

### த. மாரிமுத்து

(அ.இ.அ.தி.மு.க.) குளத்தூர் தொகுதி

தமிழ்நாடு ஹரிஜன நலக் குழு உறுப்பினர், என். ஜீ. ஓ.க்கள் தலைவர். தமிழக கணிக வரைவாளர் மத்திய சங்க உறுப்பினர், பகுத்தறிவாளர் சங்கத் துணைச் செயலாளர். இதோடு கணிக வரைவாளராகவும் (Draughtsman) இருக்கிறார் மாரிமுத்து.

தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த இவர் அவர்களுக்குள்ளேயே இருக்கும் பல்வேறு பிரிவினரிடம் ஒற்றுமையை ஏற்படுத்தி அந்தச் சமுதாய மக்களுக்கென்று பல குடிசைத் தொழில்கள் பற்றிய திட்டங்களைத் தீட்டியுள்ளார். தமது அரசியல் குரு அம்பீல் தர்மலிங்கம் என்கிறார்.





### வி. பி. பாலசுப்பிரமணியன்

(அ.இ.அ.தி.மு.க.) வேடசந்தூர் தொகுதி

சைக்கிள் ஓட்டுவது என்றால் ரொம்பப் பிடிக்கும். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் தம் சொந்த ஊரான வெல்லம்பட்டியிலிருந்து திண்டுக்கல்லுக்குத் தினமும் சைக்கிளில் 58 கிலோ மீட்டர் மிதிப்பாராம். 1965ம் ஆண்டு நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றவர்.

### சி. கோபால்

(அ.இ.அ.தி.மு.க.; சோளிங்கர் தொகுதி

பி.எஸ்.ஸி. பி.எல். பட்டதாரி. கல்லூரி மாணவராக 1965ம் ஆண்டு இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் பங்கேற்றார். பீரங்கிக் குண்டை அதிக தூரம் வீசுவதில் சாம்பியன்.

சோளிங்கர் பால் வழங்கு திட்டத்தின் தலைவராக இருந்தவர். தமிழ்நாடு கூட்டுறவு விற்பனை இணையத்தின் ஆலோசனைக் குழு உறுப்பினராகத் தமிழக அரசால் நியமிக்கப்பட்டு அ.தி.மு.க. அரசு கலைக்கப்பட்டபோது பதவி நீக்கம் செய்யப்பட்டார்.

கடந்த ஆறு மாதமாக சோளிங்கர் அருள்மிகு நரசிம்ம சாமி ஆலயத்தின் அறங்காவலர் குழுத் தலைவராக இருக்கிறார்.

பேட்டி: "சிக்கி"

⌘ வி. பி. பாலசுப்ரமணியன்
⌘ ஏ. சி. சண்முகம் (இடது)
⌘ சி. கோபால் (வலது)
⌘ த. மாரிமுத்து
⌘ ஜே. சி. டி. பிரபாகரன்

# இயலாமைக்கு வருந்துகிறோம்

## பர்வதவர்த்தினி

லோகேஷ் பெண் பார்த்துக் கொண்டிருந்தான்.

பதினெட்டாவது இடம்.

யாருக்கும் முன் அறிவிப்பு இல்லாமல் அந்த இடத்துக்கு அவன் வந்து நின்ற போது—

நல்ல வேளை; பெண் கொஞ்சம் மேக்கப் பிலேதான் இருந்தாள்.

''நான்தான லோகேஷ்... நீங்க அனுப்பின உங்கள் பெண்ணின் ஜாதகம் ரொம்பப் பொருத்தமாக இல்லேன்னாலும் அஞ்சுக்கு ரெண்டு பழுதில்லேங் கிறப்போல் பரவாயில்லே. நீங்க அனாவசியமாக் கஷ்டப்படக் கூடா தேங்கறதுக்காக நான் மட்டும் தனியா வந்துட்டேன்!....''

பெண்ணின் அப்பா லோகேஷை ஒரு கணம் ஏற இறங்கப் பார்த்தார்.

கூப்பிட்டு உள்ளே உட்கார வைத்தார்.

அவசரம் அவசரமாகச் சிற்றுண்டி தயாராகியது.

''உங்க பெண்ணுக்கு வயது முப்பத்தொண்ணு?''

லோகேஷ் கேள்வியை ஆரம்பித்தான். பெண்ணின் தகப்பனார் இயல்பான தம் கடுகடுப்பு முகத்தில் இன்னும் சற்று பாலீஷ் போட்டுக் கொண்டார்.

''முப்பத்தொண்ணு? முப்பதுதான்!''

''நானும் இதுவரை நிறையப் பெண் பார்த்துட்டேன். அதிக சீர் செனத்தியெல்லாம் எதிர் பார்க்கிறவனில்லே. வரப்போகிற பெண் நன்றாக இருக்கணும். அவ்வளவுதான்....''

''உங்களுக்கு நாற்பது முடியப் போகிறதில்லையா?'' — தாழ்ந்த குரலில் ஆங்கிலத்தில் கேட்டார் அவர்.

லோகேஷ் குதிரையின் லகான் அந்த மனிதரிடம் இருப்பது போலிருந்தது இந்தக்கேள்வி.

பெண் வந்து வணங்கினாள்.

''என்ன படிச்சிருக்கே?''

''பி. எஸ்ஸி.''

''செகண்ட் கிளாஸா?''

''பஸ்ட் கிளாஸ்.''

''உனக்கு எந்த நிறம் பிடிக்கும்?''

''எல்லா நிறமும்.''

''உயரம்?''

பெண்ணை எழுந்து உள்ளே போகும்படி ஜாடை காட்டினார் அப்பா. அம்மா அவளை அழைத்துக் கொண்டு உள்ளே போனாள்.

''உயரம் என்னன்னு கேட்டேன். என் உயரம் ஐந்தடி ஆறங்குலம்.''

''இவள் ஐந்தடி மூன்றங்குலம். போன மாசம்தான் அளந்தது. இப்போ வளர்ந்திருந்தால் நான் பொறுப்பில்லே!''

—கஷ்டப்பட்டு ஒரு சிரிப்புச் சிரித்தார் அவர்.

லோகேஷ் சிரிக்கவில்லை.

''தலை முடி ஒரிஜினல்தானே?''

''நிச்சயமாக. சின்ன வயசு முதலே தேங்காய் எண்ணெயைத் தவிர வேறே ஒண்ணுமில்லே. ஹேர் ஆயில் எங்க வீட்டிலே யாருக்குமே பிடிக்காது!''

துருவித் துருவிக் கேட்டான் லோகேஷ். அவரும் பல்லைக் கடித்துக் கொண்டு பதிலைச் சொல்லி வைத்தார்.



**வீ**ட்டுக்கு வரும் போதே சொல்லிக் கொண்டு வந்தான்.

''அக்கா இன்னைக்கு ஒரு தமாஷ். நீ வராமலே ஒரு பெண்ணைப்பார்த்துட்டு வந்தேன்! பெண் அழகுதான். குடும்பமும் பரவாயில்லே... ஆனா... பொண்ணுக்கு மூக்கு மட்டும் இன்னும் கொஞ்சம் பெரிசாக இருக்கலாமோன்னு படுது. ஆனாலும் ரொம்பச் சின்னது... குருவி மூக்கு மாதிரி!''

''அப்போ இது பதினெட்டாவது பொண்ணு?''

''அப்படித்தான் இருக்குமோன்னு கவலைப்படறேன்.''

''நீ எதுக்குக் கவலைப்படணும்? பெண்ணைப் பெத்தவர்கள்தானே கவலைப் படணும்? வேறே ஜாதகம் வருதான்னு பார்...''

''அக்கா... நீ சரின்னு சொன்னாதான். என்னா எனக்குத் தெரியாத குறை உனக்குத் தெரியும்.''

''அவர் ஆபீஸ்லிருந்து வரட்டும் சொல்றேன். நாளைக்கு நானும் அவரும் போய்ப் பார்க்கலாமா?''

''பார்க்கலாம். ஆனா எனக்கே ஏதோ குறையாத்தெரிகிறது. அந்த மூக்கு மட்டும்!''

**ம**று நாள்....

''அக்கா, என்ன வருத்தமா யிருக்கே?''

''தெருப்பக்கம் வெளியே போக முடியலே. நான் என்னவோ அழகான பெண்ணா உனக்குக் கல்யாணம் செய்து வைக்கணும்னு பத்துவருஷத்துக்கு முந்தி நாலைஞ்சு பெண்ணை வேண்டாம்னு சொன்னது நிஜம்தான். அதற்குப் பின்னாலே நீயா நிறையப் பேரை வேண்டாம்னு சொல்லிட்டே. உனக்கும் வயது நாற்பதாகிறது...''

''அதனாலே?''

''அதனாலேதான்... ஊரெல்லாம் என்ன சொல்றாங்க தெரியுமா? உனக்கொரு கல்யாணம்னு ஆயிட்டா நாங்க இருக்க முடியாதுன்னு கவலைப்பட்டுத்தான் உனக்கு வருகிற இடத்தைத் தட்டிக் கழிக்கிறோமாம்...''

''யார் சொன்னது?''

''நீயென்னவோ பாசத்தைக் கொட்டறே. இல்லேங்கலே. ஆனா தெருப் பக்கம் ஒருத்தர் பாக்கியில்லே....''

''இந்தப் பெண்ணையே நான் கல்யாணம் பண்ணிக்கத் தயார். நீ போய் இன்னிக்கே பார்த்துட்டு வா. நீயும் இங்கேயே இந்த வீட்டிலேயே இரு. யார் வேணுமானாலும் எது வேணுமானாலும் சொல்லட்டும். கவலையில்லே.'' உரக்கக் கத்தினான் லோகேஷ். அக்கா கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

**பெ**ண்ணின் வீட்டிற்கு அக்காளும் அவள் கணவன் ராமலிங்கமும் கிளம்பினார்கள்.

வழியில் ராமலிங்கம் வியப்போடு கேட்டார்: ''இது என்ன அதிசயம்? நீயுமாஜிப்



படி பதினெட்டாவதாகப் பார்க்கிற பெண் அதிர்ஷ்டம்னு யாராவது சொல்லிட்டாங்களா அவன் கிட்டே?''

''அதெல்லாம் இல்லே. இதுக்கு நான் தான் காரணம்!''

''என்ன?''

''ஆமாம். ஊரெல்லாம் என்னைத்தான் குறை சொல்றாங்கன்னு சொன்னேன். அவனுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்துட்டது. அந்த நாளிலே வந்த இடத்தையெல்லாம் அது குறை இது குறைன்னு நானும் அவனோடு சேர்ந்து தட்டிக் கழிச்சேன்.''

''அதான் தெரியுமே?''

''இப்போ எனக்கே கவலே. அவனுக்கோ வயது நாற்பது. ஊரெல்லாம் என்னைத் தூத்தருங்கன்னு பொய் சொன்னேன். நம்பிட்டான். தம்பிக்குக் கல்யாணமாயிடும்!''

பஸ் ஸ்டாப் வந்தது. ''இப்போ நீ எங்கே போகணும்னு சொன்னே?''

''மாம்பலத்துக்கு!''

''இந்த விலாசமா?'' என்றவாறே ஓர் உறையை எடுத்துக் காட்டினார்.

''இதேதான் தபால் போட்டாங்களா?''

''ஆமாம். காலேயிலே ஆபீஸ் போகும் போது தபால்காரர் வழியிலே தந்தார்.''

கடிதத்தைப் படித்தான் அவன்.

'உயர்திரு ராமலிங்கம் அவர்களுக்கு...

உங்கள் மைத்துனர் நேரில் வந்து பெண்ணைப் பார்த்தார். பொதுவாக எல்லாம் எங்களுக்குச் சம்மதம்தான்.

நாற்பது வயது என்றார். அந்த அளவுக்கு வயது தெரியவில்லே. நல்ல பர்சனாலிடிதான்' ஆனால் என் மகள் ராதிகாதான் சற்று வருத்தப்படுகிறாள். பையனுக்கு வயது கொஞ்சம் குறைவாக இருக்கலாமே என்று யோசனை செய்கிறாள். ஆகவே மேலே போக இயலாமைக்கு வருந்துகிறோம்...'

''இதை வீட்டிலேயே தந்திருக்கக் கூடாதா?''

''காரணமாத்தான் இங்கே வந்து தந்தேன். இதுவரை நிறைய இடத்திலே பெண்ணைப் பார்த்துட்டு உன் தம்பி வேண்டாம்னு தயவு தாட்சண்யமில்லாமல் லெட்டர் போட்டிருக்கான். நீயும் சேர்ந்து ஆட்டம் ஆடினே. இப்போ நீங்களா இறங்கி வர்றப்போ இப்படி ஓர் அதிர்ச்சி! இதை அவன் தாங்கிக்கணும். வெளி நாட்டிலே யாரோ ஒருத்தருக்குத் திடீர் அதிர்ச்சியாலே தலே முடி நரைச்சுப் போச்சாம். அது போல ஆயிடக் கூடாதுன்னுதான் இங்கே வந்து அவனுக்குத் தெரியாமத் தர்றேன்!''

''இப்போ என்ன செய்றது?''

''கொஞ்ச நேரம் கழிச்சு வீட்டுக்குப் போகலாம். இந்தப் பொண்ணு நல்லா இல்லேன்னு ஒரு பொய்யைச் சொல்லு. அடுத்து எந்த இடம் வந்தாலும் உடனே சரின்னு சொல்லிடு. இப்போதான் முதல் முதலா எதிர்மறையா ஒரு கடிதாக வந்திருக்கு. அது தொடராமல் பார்த்துக்கோ!''

அவன் முகத்தைப் பார்த்தார் ராமலிங்கம். பயத்தின் ரேகைகளும், கவலே ரேகைகளும் அதில் நன்றாகவே ஓடின.

கம்பவுண்டர்: இந்த பாருப்பா உங்க வீட்டிலே எல்லோருக்கும் ஜுரம்னு அதற்காக மருந்து வாங்குறதுக்கும் 'பக்கெட்'டை எடுத்து வரணுமா என்ன?



நர்ஸ்: என்னப்பா.. டிஸ்சார்ஜ் ஆகும் போது உன் அட்டையைக் கிழிச்சுக் கொடுத்திட்டுப் போகறே....

நோயாளி: நல்லா இருக்கே நீங்க கேட்கிறது... இன்னும் மூணு மாசத்துக்குத் தினமும் காலேயிலே முட்டையும் பாலும் சாப்பிடணும்னு டாக்டர் சொல்லியிருக்காரு... நாளேயிலே யிருந்து இந்த அட்டைக்கு அனுப்பிச்சிடுங்க...



## GH ஒரு போனஸ்

ஏ. வி. எம். கணேஷ்




✕ ''என்ன சார்...அரைமணி நேரமா ஆஸ்பத்திரி வாசலிலே நிக்கிறீங்களே... யாரைப் பார்க்கணும்...''

''கேட் - கீப்பரைப் பார்க்கணும்...''

''என்ன விஷயம்...?''

''ஒண்ணுமில்லே... நூறு ரூபாய்க்கு இருபத்தைஞ்சு, ஐம்பது பைசாவாகச் சில்லறை வேணும்... அதுக்காகத்தான் அவரைத் தேடுறேன்...

✕ கேட் கீப்பர்: என்னப்பா! கையிலே பொட்டலம்?

சிறுவன்: பிரியாணி...

கேட் கீப்பர்: யாருக்கு?

சிறுவன்: எங்க அப்பாருக்கு...

கேட் கீப்பர்: எந்த வார்டிலே இருக்கார்?

சிறுவன்: அல்சர் வார்டிலே...!

# புதிய தலைமுறை

**திரு பி. சி. ராமகிருஷ்ணன்**
*(மெட்ராஸ் பிளேயர்ஸ்)*

**கோ**த்தாரி சர்க்கரை டிவிஷனில் உதவி மானேஜராகப் பணியாற்றும் இந்த ஆங்கில இலக்கியப்பட்டதாரிக்கு முழுநேர ஈடுபாடும் கம்பெனி அலுவல்களில்தான். கம்பெனிக்காக "விஸ்டா ஷுகர் ஜர்னல்" என்னும் இதழுக்கு ஆசிரியராகவும் பணியாற்றுகிறார்.

கல்கத்தாவில் செண் சேவியர்ஸில் சீனியர் கேம்பிரிட்ஜ் முடிக்கும் வரையில் பதினெட்டு ஆண்டுகள் ஒன்றிப் பழகிய இவர் வியப்பது வங்கத்தின் நாடகக் கலை வளர்ச்சியை. கதையும் நாடக மேடை, ஒலி, ஒளி அமைப்பு, நாடக அமைப்பு, நடிப்பு முறை, கதை வடிவம் — எல்லாவற்றிலும் இந்தியாவிலேயே சிறந்து விளங்குவன என்று வங்காளி நாடகங்களைக் குறிப்பிடும் திரு பி. சி. ஆர். தமிழ் நாடகங்களில் "பெரும்பாலும் நல்ல கதை அமைப்பு இல்லை, நல்ல கலைஞர்களுக்குப் போதிய ஆதரவில்லை" என்று கருதுகிறார்.

1969 முதல் "மெட்ராஸ் பிளேயர்ஸ்" அமைப்பில் ஆங்கில நாடகங்களில் நடித்து வரும் இவர் கர்நாடக, ஹிந்துஸ்தானி இசைகளில் மிகுந்த ஈடுபாடு உள்ளவர். பாலக்காடு மணி அய்யரிடம் மிருதங்கம் கற்றுக்கொண்ட இவர் கச்சேரிகளுக்கும் வாசித்ததுண்டு.

தற்போது தமிழ் நாடக மேடைகளின் ஜாம்பவான்களைப் பற்றி "ஹிந்து"வில் கட்டுரை எழுதி வரும் திரு பி. சி. ராமகிருஷ்ணன் சென்னை தொலைக் காட்சியிலும் ஆங்கிலத்தில் செய்தி வாசிக்கிறார்.

கண் பார்வையற்ற ஓர் இலக்கிய மாணவருக்கு வாரம் இரண்டு நாட்கள் பாடம் படித்து உதவும் இவருடைய ஏக்கம், இன்னும் அதிக நேரம் இதற்காகச் செலவிட முடியவில்லையே என்பதுதான்.

**திரு எம். சிவராம்**
*(மானேஜிங் டைரக்டர், அருணா ஷுகர்ஸ் லிட்.)*

**பி.**காம் படித்துவிட்டு இரண்டு ஆண்டுகள் லண்டனில் பிஸினெஸ் மானேஜ்மெண்ட் படிப்பு. பின்னர் மாவு ஆலைத் தொழில், பிஸ்கட் தொழிலகம் போன்ற துறைகளில் பயிற்சி பெற்றுத் திரும்பி பத்தாண்டு காலம் அருணா ஷுகர்ஸில் எக்ஸிக்யூடிவ் டைரக்டராக இருந்தவர். இப்போது அதன் மானேஜிங் டைரக்டர்.

தினமும் டென்னிஸ் ஆடி வரும் சிவராம் யோகாசனப்பயிற்சி, மற்றும் உடற் பயிற்சிகளிலும் அக்கறை செலுத்துகிறார்.

மேற்கத்திய இசை, கர்நாடக இசை, மெல்லிசை — அனைத்திலுமே ரசனை உண்டு.

இவர்கள் நிறுவனத்துக்காக இணைக்கப் பட்டுள்ள 20,000 ஏக்கர் நிலத்தின் கரும்பு உற்பத்தியில் சிறப்பான கவனம் செலுத்தப் படுகிறது. தரமான விதைகள், ரசாயன உரங்கள், நவீன பயிரிடும் முறைகள் முதலிய அனைத்திலும் விவசாயிகளுக்குத் தேவையான உதவிகள் செய்து மேற்பார்வையிடுகிறார்கள்.

நாளொன்றுக்கு 4000 டன் கரும்பு பிழியும் திறனுள்ளவை இந்த நிறுவன ஆலைகள்.

"மேற்கத்திய நாடுகளின் தொழில்துறை வெற்றிக்குக் காரணம் தனி நபர் ஒழுங்கும் நிர்வாக ஒழுங்கும், கடின உழைப்பும், நேர்மையுணர்வுமே. இவை இங்கும் தோன்ற வேண்டும்." என்கிறார்.

கோட்டயம் அருகே உள்ள திருவல்லா சிதா ஃபிளவர் மில்ஸும் இவருடைய மேற்பார்வையிலேயே இயங்குகின்றது. **—சுப்ரபாலன்**

**வி. கா. நல்லமுத்து** (தொழிலாளர் நலன்)

**ஏ**ர்காடு நிலமலைத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் செயலாளராக இருக்கும் வி. கா. நல்லமுத்து கடந்த 12 வருடங்களாகத் தொழிலாளர் நலப் பணியில் ஈடுபட்டிருக்கிறார். குன்னூரைச் சொந்த ஊராகக் கொண்ட இவர் 8000 தொழிலாளர்களுக்குச் செயலாளராக இருக்கிறார். இந்தச் சங்கம் கம்யூனிஸ்டுகளுக்கு மாற்று அமைப்பாக இருப்பதுடன் தோட்டத் தொழிலாளர்களின் கூலியை ரூ. 4.25 லிருந்து ரூ. 5.25க்கு உயர்த்திய பெருமையையும் உடையது. தொழிலாளர் கல்விக்கென மலேசியா, ஹாங்காங், இலங்கை சென்று வந்த இவர், திருமணம் ஆன 30 வயது இளைஞர். முழுநேர செயலாளர். இவ்வளவு இளம் வயதில் இதகைய ஓர் அமைப்பின் செயலாளராக இருப்பவர் இவர் ஒருவர்தான். **—இரா. பூபதி**


✗ பி. சி. ராமகிருஷ்ணன்


✗ வி. கா. நல்லமுத்து


✗ எம். சிவராம்




நாம் நமது நாடாளு மன்றப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்தவர்கள் தங்களது பதவிக் காலத்தில் கேவலம் ஒரு உலகச் சுற்றுப் பயணம் கூடச் செய்யவில்லை என்றால் அவர்களுக்கு என்ன மதிப்பு? அவர்களைத் தேர்ந்தெடுத்த நமக்குத்தான் என்ன மதிப்பு? எனவேதான் நாம் செலுத்துகிற வரிப் பணத்தில் 16 லட்சம் ரூபாயைத் தாராளமாகச் செலவழித்துக் கொண்டு முப்பது நாடாளு மன்ற உறுப்பினர்கள் உலகச் சுற்றுப் பயணம் செய்ய இருக்கிறார்கள்.

மத்திய அரசு அலுவலகங்களில் ஹிந்தியின் உபயோகத்தைப் படிப்படியாக அதிகரிக்க வேண்டுமல்லவா? எனவே இது தொடர்பாக நமது அயல் நாட்டுத் தூதரகங்களில் என்ன முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று நேரில் பார்க்க இவர்கள் கிளம்புகிறார்கள். குழுவில் லோகசபை, ராஜ்ய சபை அங்கத்தினர்கள் உண்டு; ஆளும் கட்சி, எதிர் கட்சியினரும் உண்டு.

குழுவின் தலைவர் ஹிந்திபோலனைப் பார்த்து, ''அச்சா சலோ! ஜல்தா கரோ!'' என்றேன்.

''நழுவப் பார்க்காதே நீயும் எங்களுடன் வருகிறாய்'' என்றார் ஹிந்திபோலன்.

''நான் எதற்கு?''

''எதற்கா? எங்களது மகத்தான பணி பற்றித் தமிழகப் பத்திரிகைகளில் எழுதுவதற்கு! அப்போதாவது அங்கே ஆங்கில ஆதரவு குறைந்து ஹிந்தி ஆதரவு அதிகரிக்கிறதா பார்க்கலாம்'' என்று பட்டவர்த்தனமாகப் பேசினார் குழுவின் காரியதரிசி பட்வர்த்தன்.

கிடைத்த வாய்ப்பை நழுவ விடாமல் நானும் புறப்பட்டேன்.

முதலில் லண்டன் போய் இறங்கினார்கள். தூதரகம் போய்ச் சேர்ந்தார்கள். வந்ததும் வராததுமாய் மளமளவென்று காரியத்தைக் கவனித்தார்கள். ''என்ன நடக்கிறது இங்கே? பிரிட்டிஷாருக்குக் கடிதங்களை எல்லாம் எந்த மொழியில் எழுதுகிறீர்கள்?''

''ஆங்கிலத்தில்தான்.''

''என்னது?'' திடுக்கிட்டுக் கேட்டார் பட்வர்த்தன்.

''ஏன் ஹிந்தியில் எழுதக் கூடாதா?'' என்று வினவினார் ஹிந்திபோலன்.

''பிரிட்டனில் யாருக்கும் ஹிந்தி தெரியாதே?''

''தெரியாவிட்டால் என்ன?''

''தம் கடிதத்தைப் புரிந்து கொண்டு அவர்கள் பதில் போட வேண்டாமா?''

''அவர்கள் மொழி பெயர்ப்பாளர்களை நியமித்துக்கொள்ளட்டுமே!''

''செய்யலாம். ஆனால் பிரிட்டிஷ் அரசோ அல்லது தனியார் நிறுவனங்களோ அவர்களுக்குச் சம்பளம் தரவேண்டியிருக்குமே? அவர்கள் அந்தச் செலவை ஏற்க முன்வராவிட்டால்?''

''இவ்வளவுதானே? அப்படியானால் மொழிபெயர்ப்பாளரை நாமே நம் செலவில் நமது தூதராலயத்தில் அமர்த்தி விடுவோம்'' என்றார் ஹிந்திபோலன்.

''அப்படியானால் இந்தக் கட்டிடம் போதாதே! வேறு பெரிய இடத்தை வாடகைக்கு எடுக்க வேண்டும். செலவு அதிகமாகும்.''

''நீரா கைவிட்டுச் செலவழிக்கப் போகிறீர்? மக்கள் வரிப் பணம்தானே? செலவாகிவிட்டுப் போகட்டும். அதனால் என்ன?''

''ஆங்கிலக் கடிதத்தின் ஹிந்தி மொழிபெயர்ப்பு அனுப்பி என்ன பயன்? அது குப்பைத் தொட்டிக்குத்தானே போகப்போகிறது.''

''போனால் போகட்டுமே. நமது மத்திய ஆட்சி மொழியின் கௌரவம் குப்பைத் தொட்டியில் போகாமல் காப்பாற்றப் படும் இல்லையா?''

''மொழி பெயர்ப்பாளர் ரொம்பப் பேர் தேவைப் படுவார்களே!''

''தேவைப் பட்டால் என்ன? நியமிக்கிறது! அந்த அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் குறையுமல்லவா? என்னுடைய உறவினர்களே ஒன்பது பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள், தெரியுமா? அவர்களைச் சிபாரிசு பிடித்து அனுப்பி வைக்கிறேன்'' என்றார் பட்வர்த்தன்.

அடுத்து அவர்கள் ஃப்ராங்க்பர்ட் போய்க் குதித்தார்கள்.

லண்டன் போல் அல்லாது இங்கே ஆங்கிலக் கடிதங்களுக்கு எல்லாம் மொழிபெயர்ப்புத் தயாராவதைக் கண்டு ஹிந்திபோலனுக்கு ரொம்ப சந்தோஷம். ஆனால் கிட்ட நெருங்கிப் பார்த்தபோது மகிழ்ச்சியெல்லாம் ஏமாற்றமாய்



முடிந்தது. அங்கே ஜெர்மானிய மொழிபெயர்ப்புத்தான் தயாராகிக் கொண்டிருந்தது!

தூதரகத் தலைவரை அழைத்து, "இதென்ன அநியாயம்? ஏன் ஹிந்தியில் மொழி பெயர்க்கவில்லை?" என்றார்.

"ஜெர்மனியில் யாரும் ஹிந்தி படிக்க மாட்டார்கள். ஜெர்மன் மொழி பெயர்ப்பு அனுப்பினால் சந்தோஷப்படுவார்கள்."

"அவர்கள் சந்தோஷத்தைக் குப்பையிலே போடு. நான் சந்தோஷப்பட வேண்டாமா?" என்றார் பட்வர்த்தன்.

தூதரக அதிகாரி "1963ம் ஆண்டின் ஆட்சி மொழிச் சட்டம் என்ன சொல்கிறது தெரியுமா?" என்று கேட்டார். "'அவசியம் நேர்ந்தால் 15 ஆண்டுகளுக்குப் பிறகும் ஆங்கிலம் நீடிக்க அனுமதிக்கப்பட வேண்டும்' என்கிறது."

"யார் வேண்டாம் என்றார்கள்? பேஷாக ஆங்கிலம் நீடிக்கட்டும். அதற்கு ஜெர்மன் மொழி பெயர்ப்புடன் ஹிந்தி மொழி பெயர்ப்பும் அனுப்புங்கள் என்கிறோம். அவ்வளவுதானே!" என்றார் ஹிந்திபோலன்.

"ஆமாம், என் உறவினர்கள் ரொம்பப் பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள். அவர்களை வேணுமானால் அனுப்பி வைக்கிறேன்" என்றார் பட்வர்த்தன்.

"உங்கள் உறவினருக்கு ஹிந்தி, ஆங்கிலம், ஜெர்மன் மூன்று மொழிகளில் பாண்டித்யம் உண்டா?" என்றார் தூதரக அதிகாரி வியப்புடன்.

"மூன்று மொழிகள் தெரியாவிட்டால் என்ன? கடிதங்களை மடித்து உறைக்குள் போட்டு ஒட்டத் தெரியுமே!" என்றார் பட்வர்த்தன்.

இதற்குள் அவர்கள் ரொம்ப வேலை செய்து களைத்துப் போய் விட்டார்கள். ஆட்சி மொழிக் குழுவினர் பாரிஸை அடைந்தபோது வீக் எண்ட் விடுமுறை. "நல்ல காலம் ஓய்வெடுக்கலாம்" என்றார் ஹிந்திபோலன்.

"ஆமாம், ஒரு நைட் கிளப்புக்குப் போக வேண்டியதுதான்!" என்றார் பட்வர்த்தன்.

வரவேற்க விமான நிலையத்துக்கு வந்த தூதரக அதிகாரியிடம், "நீங்கள் நைட் கிளப்புகளுக்குப் போவது உண்டா?" என்றார் ஹிந்திபோலன்.

"எப்போதாவது உண்டு" என்றார் அதிகாரி.

"இன்று இரவு நீங்கள் போகிறீர்கள். நாங்களும் உடன் வருகிறோம்" என்றார் பட்வர்த்தன்.

"அரசுச் செலவிலா?"

"ஆமாம், வரி செலுத்துவோர் செலவில்தான்!"

"நைட் கிளப்புக்கும் நீங்கள் வந்திருக்கும் காரியத்துக்கும் என்ன சம்பந்தம்?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? அங்கே கடைசி ஒரு சாண் துணியும் அவிழ்த்து எறியப்படும் போது இந்திய தூதரக அதிகாரி என்ற முறையில் நீ 'ஹுர்ரே' என்று ஆங்கிலத்




தில் கூவி கைதட்டப் போகிறாயா; அல்லது 'சபாஷ்' என்று ஹிந்தியில் கூறுகிறாயா; அல்லது 'பிராவோ!' என்று பிரெஞ்சில் கூச்சலிடப் போகிறாயா என்பது எங்களுக்குத் தெரிய வேண்டாமா?"

வாதத்தில் இருந்த நியாயத்தை மறுக்க முடியாமல் "சரி" என்றார் அதிகாரி. "எனக்காகும் செலவையும் கணக்கில் எழுதலாமல்லவா?" என்று கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டார்.

நைட் கிளப்பில் பட்வர்த்தனும், ஹிந்திபோலனும் சும்மா சொல்லக் கூடாது, கடமையே காதாயிருந்தனர்! கண்கள் வேறு எதையோ பார்த்துக்கொண்டிருந்தாலும் காதுகள்மட்டும் பாரிஸில் உள்ள இந்திய தூதரக அதிகாரி எந்த மொழியில் கூவப் போகிறார் என்பதை அறிவதிலேயே கவனமாய் இருந்தன!

ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த அந்த விநாடியும் வந்தது. எழுந்தது ஒரு பலமான சீழ்க்கை ஒலி! விளக்குகள் பட்டென்று அணைந்தன.

மீண்டும் ஒளி பரவிய போது "எந்த மொழியில் சீழ்க்கை ஒலி எழுப்பினாய், சொல்லிவிடு!" என்றார் ஹிந்திபோலன்

"ஆமாம், கூறிவிடு; ஏமாற்றப் பார்க்காதே!" என்றார் பட்வர்த்தன்.

"நண்பர்களே! எனக்கே அது தெரியவில்லை; நாம் இன்னொரு நைட்கிளப்புக்குப் போய் இந்தப் பரிசோதனையைத் தொடரலாம்என்று நினைக்கிறேன்!" என்றார் அதிகாரி.

"அச்சா!" என்றார் ஹிந்திபோலன், சாம்பெய்ன் கோப்பையைக் காலிசெய்தவாறே.

"வாரே வாஹ்—! என்ன அற்புதமான யோசனை!" என்றார் பட்வர்த்தன்.

குழுவிலிருந்த முப்பது பேரும் ஆமோதித்துக் கோப்பைகளை உயர்த்தினார்கள். "விடை கிடைக்கும்வரைவிட மாட்டோம்!" என்றார்கள்.

# சுமைகள்

எம்.எஸ்.பெருமாள்



நைட் வாட்ச்மேன் உத்தியோகத்துக்கே போயிருக்கலாம் தினசரி பன்னிரண்டு பன்னிரண்டரை வரையிலே சுஜாதாவை... இந்துமதியை.... சிவசங்கரியைப் புரட்டிக் கொண்டு உஷாவை எதிர்பார்த்துக் காத்திருக்கிற அவலத்துக்கு.

பத்து மணிக்கு மேல்தான் எங்கள் வீட்டில் பரபரப்பே ஆரம்பிக்கும். சர்க்கார் ஆபீஸில் 4.50 பரபரப்பு மாதிரி. டி.வி.யில் நிகழ்ச்சியை முடித்துக் கொண்டு பிரியா விடை கொடுக்கும் பெண்ணைப் பெருமூச்சுடன் பார்த்தபடியே என் தம்பி சோம்பல் முறிக்கிறான். சிறிசுகள் குபீரென்று எழுந்து நின்று டி.வி. திரையை உற்று நோக்குகின்றன. ஒளிச் சிதறல்கள் ஒடுங்கி ஒரு புள்ளியாக இருள் திரை கவிகின்ற எலெக்ட்ரானிக் சுருக்கை ஒரு மாஜிக் போல் ரசித்து விட்டு அத்தனை பொடிசுகளும் ஒரே பாய்ச்சலாக டைனிங் டேபிளுக்கு ஓடிவருகின்றன.

''எனக்கு காம்ப்ளான்.''

''எனக்கு ஹார்லிக்ஸ்.''

''போர்ன்விட்டா.''

ஒரு வர்த்தக ஒலிபரப்புக் கூச்சலுடன் டைனிங் ஹால் அமளிப்படுகிறது. உஷா அப்போதுதான் வேலைக்குச் சேர்ந்த சமையற்காரியைப் போல் புன்சிரிப்புத் தவழ சுறுசுறுப்போடு — கையில் ஒரு வட்டத் தட்டிலே நாலு கண்ணாடித் தம்ளர்களில் தனித் தனிப் பானங்களோடு— வருகிறாள். புத்திளமை கண்ணுக்கு விருந்து. காத்துக் கிடக்கிற மனசுக்கு எதிரி.

''சித்தி குட்-நைட்'', ''மாமி குட்-நைட்'', ''மன்னி குட்-நைட்.''

—வரிசையாக எச்சில் உதடுகளோடு முத்தங்கள். படுக்கையறையிலே நான் மட்டும் பட்டினி. நானும் இந்த வீட்டிலே முப்பது வயது வாலிபனாக இல்லாமல் இந்த முழு நிலவுக்குக் கணவனாக இல்லாமல், குழந்தையாக இருந்திருந்தால் எனக்கும் அவள் ஸ்பரிசம் கிடைத்திருக்கும்...

''மன்னி... சுக்கா ரொட்டி...''

—மன்னியிடம் வேண்டுகோளா? மன்னியைப் பற்றிய விமரிசனமா என்ற தொனி விளங்காத அளவுக்கு என் தம்பி சாப்பிட உட்காருகிறான். இரண்டு சப்பாத்தி ஒரு வெள்ளரித் துண்டு, ஒரு பழம், ஒரு கப் பால். (வெங்காயம் தன்னுடைய — தம்பி மனைவி அவள் அம்மா வீட்டில்) டயட்டிலே இருக்கிறான். டயட்படி சாப்பாடு.

அளவுச் சாப்பாட்டை அவசரத்தையோடு எடுத்துச் சாப்பிடுகிறான் என் தம்பி.

''உஷா... குக்கரை எறக்கிடம்மா. அவர் வர்ற நாழியாய்டுத்து பாரு....''

அம்மாவின் குரல் குக்கருக்கு முன்னாலேயே சீறும். படுக்கையில் இருந்தபடியே கணவருக்குப் பணிவிடை செய்கிற விநயம்.

அப்பா பிரவசனத்தை முடித்துவிட்டுப் பத்தே காலுக்கு வருவார். பரபரவென்று குளிப்பார். விபூதியை அள்ளி நெற்றியில் இறைத்துக் கொண்டு இலை முன் உட்காருவார். சாதக் கரண்டியைத் தொட முடியாது. அப்படிக் கொதிக்கும். அப்பாவுக்கு அந்தச் சூடுதான் ஏற்கும்.

கையிலிருந்த இந்துமதியை விசிறி எறிகிறேன். பக்கவாட்டில் திரும்பி அலமாரியிலிருந்து கைக்கு எட்டும் புத்தகத்தை இழுக்கிறேன். எடுக்கிறேன். பிரிக்கிறேன். படிக்கிறேன். ஹெரால்ட் ராபின்ஸ். நாலு பக்கம் படிப்பதற்குள் மறுபடியும் இந்துமதியை இங்கிலீஷ் எழுத்துக்களில் படிக்கிற உணர்வுதான்.

மணி பதினொன்று.

பத்துப் பாத்திரத்தை ஒழித்துப் போட்டு விட்டுச் சமையலறையைக் கழுவிக் கோலம் போடுகிற உஷாவை நெருங்கி ஒரு சூப்-தேரா...

மனசு மட்டும் எழுந்து போய்ப் பார்க்கிறது. அவள் அலுப்புக்கு அனுதாபத்தைத் தெரிவித்துக் கட்டிலுக்கு வந்து விழுகிறது.

பன்னிரண்டு மணிக்குத் தூங்குகிற அம்மாவை எழுப்பி காம்ப்ளான், காம்போஸ் மாத்திரை, கருமாரி பிரசாதம் கொடுக்கிறாள். அது நித்திய நியதி. அம்மாவுக்கு மறந்துபோன மாதிரியும் மருமகள் நினைவாக எடுத்துத் தருகிற மாதிரியும்.

விளக்கைப் போட்டதால் தூக்கம் கலைந்த பாவனையுடன் அக்கா புரண்டு படுக்கிறாள்,



கண்களில் தூக்கக் கலக்கம் இல்லே. கண்ணீர்த் தடங்கள்.

''அத்திம்பேர் வந்துட்டாராம்மா?''

''வந்துடுவார் அக்கா!''

அத்திம்பேராவது வருவதாவது?

''நீயே நிக்க முடியலே... அப்புறம் எப்படி...ஒன்...'' என்று கபாரே ஆட்டக்காரி மானத்தை வாங்குகிற வரை இளப்பில் நாயாய் உருளுவார். எவனாவது டாக்ஸியிலே அள்ளிப் போட்டுக் கொண்டு வாசலில் உருட்டித் தள்ளிவிட்டுப் போவான். தவழ்ந்தபடியே கதவைத் தட்டி நெட்டித் தள்ளிவிட்டு திடீரென்று வீட்டு மாப்பிள்ளை என்ற உணர்வு வந்து எழுந்து நடக்க ஆரம்பிப்பார். மீறிக் கேட்டால் 'சிக்காளிப் பெண்ணைத் தலையிலே கட்டி விட்டு உங்களுக்கெல்லாம் பேச்சு ஒரு கேடா...' என்று சீறுவார்.

சாப்பாடு என்ற பேரில் ஒரு கொறிப்பு. சிரித்த முகத்தோடு உஷா பரிமாறுகிறாள்.

அவர் வந்து அரை மணி கழித்துத்தான் அவர் பிள்ளை ரமேஷ் வருவான். அப்பாவும் பிள்ளையும் இரண்டு மணி வரை விழித்திருக்கிறவர்கள். இது வித்தியாசமான விழிப்பு.

ரமேஷ் டைரக்டராக வேண்டும் என்று ஆசைப்பட்டு அக்காவின் ரெட்டைச் சரம், வைரக் கம்மல், கல் வளையல் எல்லாவற்றையும் முதலீடாக்கிப் படம் எடுக்க ஆரம்பித்து, அண்டியிருந்த அத்தனை பேர்களையும் பணக்காரர்களாக்கி விட்டுத் தலையைத் தொங்கப்போட்டபடி தன் அம்மா முன்னால் வந்து நின்றவனை அக்காவின் வார்த்தைகள் நிமிர்த்தி வைத்தன. 'சினிமாவிலுலே பணம் போகணும்னு இருந்திருக்கு... சினிமாக்காரிகளுக்கு அப்பா கொட்டிக் கொடுத்திடப் போறு ரேன்னு நீ சினிமா எடுத்துப் பணத்தைத் தொலைச்சுட்டே... அப்பாவையும் அந்தப் பழியிலேருந்து காப்பாத்திட்டே...'

எவ்வளவு வேதனை இருந்தால் அக்கா விடமிருந்து அந்த வார்த்தைகள் வர முடியும்? 'எப்படியாவது உன் நகைகளை மீட்டுத் தர்றேம்மா' என்று சபதம்போட்டு சினிமாத் தியேட்டரில் – இவன் படத்தை மூன்றும் நாள் தூக்கி வெளியே எறிந்த தியேட்டரிலேயே புரொஜக்டர் - ஆபரேட்டராக வேலைக்குச் சேர்ந்து இரண்டு மணிவரை இடுப்பை... கண்ணை... மனசை ஒடித்துக் கொண்டு தினசரி இரண்டு மணிக்குத்தான் வீடு திரும்புவான்.

தூங்கி எழுந்த சுவடு என்றில்லாமல், இரண்டு மணி வரை தூங்காமல் காத்திருக்கிற உஷா அவன் கண்களுக்கு அன்னபூரணி, ஆதி பராசக்தி.

''டேபிள்ளே வச்சுட்டாப் போதும்னு சொன்னேனே மாமி...''

''மாமின்னு கூப்பிடாதேன்னு நானும் சொல்லிருக்கேன். பேர் சொல்லிக் கூப்பிடேன்.''

''அது மரியாதை இல்லே. உங்க சிரமத்துக்காவது நான் பத்து மணிக்குள்ளே வீட்டுக்குத் திரும்பற மாதிரி வேலை தேடிக்கிறேன்.''

''அதுக்குப் பதிலா ஒனக்குன்னு ஒருத்தியைத் தேடிக்கோ. எம் பாரத்தை எறக்கி வச்சுடறேன்.''

''ரெண்டு மணி வரைக்கும் முழிச்சுண்டு காத்திண்டிருக்கிறதுக்கு அவளுக்கும் என்ன பைத்தியமா – ஒங்களைப் போல.''

—அடி செருப்பாலே! இந்தப் பைத்தியத்துக்காக ஒருநாளைப் போல ரெண்டு மணி வரைக்கும் நான் தூங்காம தவம் இருக்கிறது இந்தக் களா மேதைக்குப் புரியலியோ....

மனசுக்குள்ளே மருமானுக்கு அர்ச்சனை. புத்தகத்தைப் பூப்பூவாய்ப் பிரிக்கிறேன்! கண்ணிலே தூக்கம் திரையாய்க் கவிகிறது.

உஷா ஹார்லிக்ஸ் கரைத்துக் கொண்டு வருகிறாள். கதவு உட்புறம் தாளிடப்படுகிறது.

''துர்வாசர் தூங்கியாச்சா...''

காதுக்குள் முணு முணுப்பு. விழித்துப் பார்க்கிறேன். அறையின் மங்கல் வெளிச்சத்தில் மல்லிகை மோகினி மாதிரி உஷா... என் உஷா.

இடுப்பைச் சுற்றி என் கரங்கள் இறுக, உஷா என்மேல் சாய்கிறாள். மூச்சுக் காற்று மோதித் திரும்புகிற நெருக்கத்தில் அவள் கண்களைக் கூர்ந்து பார்க்கிறேன்.

சோர்வு... சோர்வுச் சுமை... சோர்வுத் திரை.

இதற்கு மேல் நான் இவளைக் கொஞ்சி வழிக்குக் கொண்டு வந்து உணர்ச்சிகளுக்கு வடிகால் கிடைத்த பிறகு நான் மட்டும் எட்டு மணி வரை தூங்கி....

'சீ, இது அவசியம்தானா' என்று மனம் மறுக்கிறது. 'நீ-மனிதன்தானா' என்று அறிவு அதட்டல் போடுகிறது. ஆசையை, காமத்தை அறிவும் மனிதத் தன்மையும் அடக்கி வைக்கின்றன. அனுதாபம் காட்டுவது கூட ஒரு வகையில் அன்பு செலுத்துவதற்குச் சமம்தானே... என் மார்பில் சாய்ந்த படியே உஷா உறங்கிப் போகிறாள். இரண்டு மணி வரையில் உழைக்கிற அலுப்பை உதறுவதற்கு முன்னாலேயே நாலரைமணிக்கு எழுந்தாக வேண்டிய பொறுப்பு அலாரமாக அவள் காதுகளில் இரைந்து இரைக்கிறது.

நானே மாறலாம், நாலு நாளில் நிம்மதி கிடைக்கலாம் என்று நாட்களைத் தள்ளித் தள்ளிப் போட்டதில் தங்கை இரண்டாவது பிரசவத்துக்கு வந்தபோதுதான் எனக்கும் உஷாவுக்கும் உள்ள அனுதாப — இடைவெளிக்கு வயது இரண்டு என்ற உண்மை பொறிதட்டுகிறது. இன்னும் எத்தனை வருடங்களோ....?

அத்திம்பேரின் தகப்பனார் காலமான பத்து நாட்களில் அவருடைய சொத்துக்களைப் பார்த்து 'எஸ்டிமேட்' போட்டு ஒரு வழியாகச் செட்டில் பண்ணிக் கொண்டு வருகிற பொறுப்பு என் தலையில் விழுகிறது. ரமேஷின் படப் பைத்தியம் தெளிய... அத்திம்பேரின் செக்ஸ்-வழி-செலவுகளுக்குப் பணம் சேர்க்க....

வயல் வரப்பு, தென்னந் தோப்பு, பருத்திக்காடு என்று ஊர் கொள்ளாமல் வளைத்துப் போட்டிருக்கிறார் பெரியவர். ஒரு வாரம் தங்கியிருந்து விளைச்சல், வெள்ளாமை பற்றிய விவரங்களை அசை போட்டுக்கொண்டிருந்ததில் ஒரு கறுப்புத் திராட்சை கண்ணுக்குள்ளேயே நிற்கிறது. கலகம்....

கன்றுக்குட்டியின் துள்ளல்... கம்பீரத்துக்குப் பஞ்சகல்யாணி... உடல் வாளிப்பு— வாழைத் தோப்பு. தகழியின் கறுத்தம்மையை நினைவுபடுத்துகிற நீரோட்டம் நிறைந்த கண்கள்....

இரண்டு குலை தேங்காயோ, இரண்டு ஆள் சுமக்கக் கூடிய கதிர்க் கட்டுகளோ, வாழைத் தாரோ, உர மூட்டையோ — எதுவானாலும் 'தா... ஒரு கை புடி'ங்கிறேன் என்கிற குரல் கேட்கும். அடுத்த கணம், சுமை இடம் மாறுகிற வேகம் தெரியாமல் 'டக்'கென்று அவள் தலையில் ஏறியிருக்கும்.

விசுக் விசுக்கென்று ஒரு நடை.

---

# எதிர் வீட்டு ஜன்னல்

தன்னை அவமானப்படுத்திய ருக்குவை (ராதிகா) அடைவதாக சபதம் செய்யும் கிருஷ்ணனாக சுதாகர். அவரே அப்பாவி கிராமத்தான் வேஷத்தில் எதிர் வீட்டில் குடியேறி ஜன்னல் வழியாக ருக்குவுடன் காதல் பரிவர்த்தனை நடத்துகிறார். நினைத்ததை நினைத்தபடி முடிக்கிறார் கிருஷ்ணா. பிறகு டிராக் மாறுகிறது. இருவரும் எதிர்பாராக் கொலை செய்து, காட்டில் ஒளிந்து வாழ்ந்து, குழந்தை பெற்று, போலீஸில் சிக்கி ஐந்து வருட தண்டனை முடிந்து ஒன்று சேருகிறார்கள்.

அப்பாவி வேஷத்துக்கு ஹேர் ஸ்டைலை மாற்றும்போது நடிப்பையும் அழகாய் மாற்றுகிறார் சுதாகர். அதிசயம். எறும்பூரக் கல்லும் குழியும் கதையாய் நடித்து நடித்து ராதிகாவுக்கு நடிப்பு வருகிறது.

கருணியின் குடிகார சந்தேக நினைப்பும், நடிப்பும் கலகலா. போலீஸ்காரரிடமே 25 ரூபாய் பர்மிட் பற்றி அபிப்ராயம் கேட்பது நல்லா. ஊமையாய் வந்து சுறுசுறுப்புடன் மனசில் புகுந்து அக்கா மேரியின் (லகமதி) கவர்ச்சிகர உதவியுடன் தப்பித்து இறுதியில் உயிர் விடும் மாஸ்டர் ஹாஜா ஷெரீப் நடிப்புக்கு கன்கிராட்ஸ்!

ஒளி, ஒலிப்பதிவின் பிராக்ரஸ் ரிப்போர்டில் தாராளமாய்க் கையெழுத்துப் போடலாம்.

டைரக்ஷன் கலைஞானம் — சினிமாவே ஒரு ஸிம்பாலிக் மீடியமாய் மாறிவரும் இந்தக் காலத்தில் சம்பந்தமில்லாது வரும் ஸிம்பாலிக் காட்சிகளை டைரக்டரின் முதல் முயற்சி என்பதால் மன்னிக்கலாம்.

எதிர் வீட்டு ஜன்னல் இடைவேளைக்குப் பின் மூடியிருக்கிறது. —நளினி சாஸ்திரி



அனைவருக்கும்
மனநிறைவு தரும்
சுவைமிகு ஊறுகாய்!

**டி.எஸ்.ஆர்**
**வெஜிடபிள்**
**ஊறுகாய்**

டி. எஸ். ஆர். & கோ.,
'கோகுல் கார்டன்ஸ்'
கும்பகோணம்.




Criterion TSR 3375 TM

# மோகினி

மிக்ஸி
தயாரிப்புகளிலே
முற்றிலும்
மாறுபட்டது

Mohini



மூன்று சைஸ்களில்
கிடைக்கிறது






# சீகோ

மாவரைக்கும்
இயந்திரங்கள்

வெட் கிரைண்டர்

CEECO




பலவித
சைஸ்களிலும்
கிடைக்கிறது

OSR

வியாபார விசாரணைகள் வரவேற்கப் படுகின்றன

**கோயமுத்தூர் எலெக்ட்ரிக் & இன்ஜினியரிங் கார்ப்பரேஷன்**

பழைய தபாலாபீஸ் ரோடு • கோயமுத்தூர் - 641018 • போன்: 32509/32598

---

உலகப் புகழ் பெற்ற ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் உணவுப்பொருள்கள்




(REGD.)

## ஊறுகாய்கள்

(PICKLES)

மாங்காய், ஆவக்காய், எலுமிச்சை,
வெங்காயம் மற்றும் மிக்சட் வெஜிடபிள்
முதலியன




(REGD.)

**SRI GANESHRAM & CO.,**

193, Thambu Chetty St., Madras - 600 001

---

எமது இடீர் புளியோதரை பேஸ்ட் உபயோகித்துப் பார்க்கவும்

---

செய்முறைகளை உருவாக்கி, தர – உயர்வை நிர்ணயிப்பவர்கள் :

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிடிக்கல் லாபரெட்டரீஸ், சென்னை-600 001**

உணவு, அதனைச் சார்ந்த உணவுப் பொருட்கள், எண்ணெய் வகைகள், பால் பண்ணைப் பொருட்கள், பேக்கரி பொருட்கள், பானங்கள், குளிர்ந்த பானங்கள், பழங்களிலிருந்து தயாரிக்கும் பொருட்கள், உரம் மற்றும் கால்நடைத் தீவனங்கள், தண்ணீர், சோப்பு வகைகள் மற்றும் I.S.I. F.P.O. Agmark போன்ற தரக்கட்டுப் பாடுகள் உள்ள ஏனைய பொருட்களும் எமது லாபரட்டரியில் பரிசோதித்துத் தருகிறோம்.

---

**கவனிக்கவும்** எமது தயாரிப்புகளனைத்தும் 777 லேபில் பாக்கெட்டுகளில் மட்டுமே கிடைக்கும். உதிரி விற்பனை (Loose) செய்வது எமது தயாரிப்புகள் அல்ல என்பதை முக்கியமாக கவனிக்கவும்.

'மண்ணிலே எங்கே மிதிக்கிறேன்::: உம் மனசிலேதானே மிதிக்கிறேன்' என்று சொல்லிச் சொல்லி நடக்கிற ஒரு ஒயில். ஒரு ஒய்யாரம். 'பாவி மகள் இவ்வளவு சுமையை எப்படி இவ்வளவு 'லாகவமாகச் சுமக்கிறாள் என்று வியப்பு அடங்குவதற்குள் பார்வையிலிருந்து மறைந்து மனசுக்குள்ளே இறங்கி நடக்கத் தொடங்குகிறாள்...:

இன்று வாரக் கூலி கொடுக்கிற நாளாம். கார்வார் என்னைக் கட்டிலில் உட்கார்த்தி வைத்துவிட்டு. ''ஏ புள்ளே... ஐயாவுக்கு எளநியைச் சீவு'' என்று கனகத்துக்கு உத்தரவு போட்டுவிட்டு மற்றவர்களுக்கு நெல் அளக்கப் போய்விடுகிறார்.

கனகம் கார்வாரை வழிமறிக்கிறாள்.

''கார்வாரய்யா எனக்கெங்கே நெல்லு?''

''பணமா வாங்கிக்க எடுத்துக்கிட்டுப் போகச் சுளுவா இருக்குமில்லே....''

''சுமக்கப் பயந்தவளாக்கும் நானு?''

''ஆத்தாடி... நீ சுமக்காத சுமையா... நாத்து முடிச்சு சொமப்பே... கதிர்க் கட்டு சொமப்பே... எளநிக் குலை சொமப்பே... உர மூட்டை சொமப்பே... வாழத் தாரு சொமப்போ... வாரம் மூச்சூடும் சொமந்து சொமந்து புண்ணாப் போன ஒன் ஒடம்பு கூலியையும் ஏன் பொருளா வாங்கிச் சொமக்கணும்னுதான் பாக்குறேன்.''

''கார்வாரய்யா, வாரம் முச்சூடும் சொமக்கிறதே வாரக் கடைசிலே வரப்போற இந்தச் சுமையை வாங்குற சந்தோஷத்திலேதான்யா... இந்தச் சுமை கெடைக்குங்கிற நம்பிக்கையிலேதான் நான் பூராச் சுமக்குறதைப் பெருஞ் சுமையா நெனைக்கிறதில்லே... இது இல்லேன்னு ஆயிட்டாத்தான் கற்பூரம் கூடக் கடுஞ் சுமையா தோணும்...''

—பேசுவது கனகமா உஷாவா?

கனகம் பேசப் பேச உஷா பனிப் புகையாய் வளைய வருகிறாள். விடியற்காலை நாலரை மணிக்குப் பாய்லரில் கரி போடுகிற உஷா... பால் செம்போடு கொல்லைப்புறத்திலிருந்து வருகிற உஷா.. ஈரம் உலராத கூந்தலைக் கோடாலி முடிச்சாக்கிப் பனியில் குளித்த மலராகப் பூஜையறையிலிருந்து வருகிற உஷா... சமையலறையை யாகசாலையாக மதிக்கிற உஷா.. எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு இரவு இரண்டு மணிக்கு 'துர்வாசர் தூங்கியாச்சா' என்ற குறும்புடன் என் மார்பில் தூங்குகிற உஷா.. அனுதாபம் எங்கே முடியவேண்டும். ஆரவாரம் எங்கே தொடங்கவேண்டும் என்ற எல்லைக் கோடு தெரியாத என் மார்பிலே மலராகச் சரிகிற உஷா... 'இந்தச் சுமை கிடைக்குங்கிற நம்பிக்கையில்தான் நான் பூரா சுமக்குறதை பெருஞ்சுமையா நினைக்கிறதில்லே... இது இல்லேன்னு ஆயிட்டாத்தான் கற்பூரங்கூடக் கடுஞ் சுமையாத் தோணும்....'

ஊருக்குத் திரும்பிய அன்று முதல் உஷாவின் இரவு மூன்றரைக்குத்தான் ஆரம்பிக்கிறது. இப்போதெல்லாம் அவள் கண்களில் சோர்வு... சோர்வுச் சுமை... சோர்வுத் திரை எதுவும் இல்லை. சுகம்... சுகம்... சுகம்தான் கண் சிமிட்டுகிறது.

# கீதா ஒரு செண்பகப்பூ

அக்கா மகளை ஆசையாய்க் கைபிடிக்க வந்து ஏமாறுகிறார் ராணுவக்காரர் ஸ்ரீகாந்த். அக்கா மகள் லாவண்யாவோ வீட்டில் தங்கியிருக்கும் ஜெய் கணேஷைக் காதலிக்கிறார். ஜெய் கணேஷோ தன் எம்.டி. சுபாஷிணியைக் கல்யாணம் செய்து கொள்ளுகிறார். சுபாஷிணியோ தேவையில்லா வில்லனிடம் தேவையில்லாமல் பயப்படுகிறார். கடைசியில் காலிழந்த மாமாவுக்கு ஊன்றுகோலாகிறார் லாவண்யா.

கதையைக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டிருக்கிறார்கள். 'சில சமயம் சிக்கலா இருக்கு. சில சமயம் சிக்கலில்லாம இருக்கு. ஒரே குழப்பமா இருக்கு' — இந்த வசனம் படத்தில் வருகிறது. நம் மனத்திலும் வருகிறது.

ஸ்ரீகாந்த், ஜெய்கணேஷ், சுபாஷிணி, லாவண்யா எல்லோரும் மோசம் செய்யவில்லை. எல்லோரும் நிறையக் கனவு காண்கிறார்கள்.

சுருளியும் நீலுவும் ஜூனியர் பாலையாவும் பக்கிரிசாமியும் இருக்கிறார்கள். மனோரமாவும் சச்சுவும் இருக்கிறார்கள். இல்லாதது சிரிப்பு.

ஒளிப்பதிவு அபஸ்வரமாய் அதிர்கிறது. மல்லி தயாளன் 'ஒளிர்'கிறார். இசை எம். எஸ். வி. என்பதால் நிறைய எதிர்பார்க்கிறோம். ஹூஹும்.

டைரக்ஷன் எஸ். ஏ. கண்ணன். சொல்வதற்கு வேறு என்ன இருக்கிறது?

-நளினி சாஸ்திரி



# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹடன்ஸா

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

உ
திருச்சிற்றம்பலம்

## தில்லையம்பலவனுக்குத் திருமறைப் பணி

வேதநாயகரான ஸ்ரீமத் நடராஜ மூர்த்தியின் முன் பிரதி தினமும் காலை 7 முதல் 8 வரை வேதத்திற்கு இருவராக ருக், யஜுர், ஸாம மறை மந்திரம் ஓதும் பணியைச் சிதம்பரம் ஸ்ரீ சித் சபேஸ த்ரிவேத பாராயண பரிபாலன ஸபை நடத்தி வருகிறது. மேற்படி வேதம் ஓதுபவர்களுக்கு சென்ற ஜூன் மாதம் முதல் ஒரு வேளை பகல் போஜனத்துக்கும் சேர்த்து ரூ 100/- சம்பளமாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. மேலும் வேத பாடசாலை ஒன்று துவங்கவும் இருக்கிறது. சென்ற வருஷத்திய ஆடிட்டான கணக்குப்படி ரூ. 69,101/- மூலதனமாக உள்ளது. அதனை ரூபாய் ஒரு லக்ஷத்துக்கு உயர்த்த உத்தேசித்துள்ளது. இதற்கு ஆயுள் சந்தாவாக தலா ரூ. 100/-ம் அதற்கு மேலும் அளிக்கும் அன்பர்கள், **காரியதரிசி, ஸ்ரீ சித் சபேஸ த்ரிவேத பாராயண பரிபாலன ஸபா** (பதிவு பெற்றுள்ளது). **73, வடக்கு வீதி. சிதம்பரம் - 608001** என்ற முகவரிக்கு தொகை அனுப்பி ஆதனை ஆதரிக்க வேண்டுகிறோம்.

**ஸ்ரீ சித் சபேஸ த்ரிவேத பாராயண பரிபாலன ஸபா**
சிதம்பரம்

2141



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,
தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,
இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'
ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

*அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.*

❋ குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்
❋ கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்

*சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டாமா?*

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| A-வகுப்பு ரூ. 350-00 | B-வகுப்பு 250-00 | C-வகுப்பு 175-00 | மீடியம் 115-00 | ஸ்பெஷல் 90-00 | I-ம் நெம்பர் 75-00 | நேரில் பெறலாம் V.P.P.யிலும் பெறலாம் |

தலைமை அலுவலகம் :

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்
(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)
காந்தி ஸ்டேடியம் - சேலம்-636007

# கடுகு பதில்கள்

✠ ரு. அருணாசலம், தென்காசி

கே: பெண்கள் கூட்டம் அதிகம் காணப்படுவது கோவிலிலா, சினிமா தியேட்டரிலா?

ப: பகல் 12 மணிக் காட்சிகளில் பெண்கள் தான் பவுடர் முகத்தில் வியர்வை ஆறு கப் பெருகத் தியேட்டர்களில் நிரம்பி வழி கிறார்கள். வேலையில்லாத இளைஞர்களையும் பல குடும்பப் பெண்களையும் சினிமா மோகம் பலமாகப் பிடித்தாட்டுகிறது. சினிமாவுடன் கோவில் போட்டி போட முடியாது.

✠ எஸ். சந்திரமௌலி, சென்னை-34

கே: கல்லூரிகளில் ரேகிங் தேவைதானா?

ப: ரேகிங் என்பது ஒரு நல்ல எண்ணத் துடன்தான் முதன் முதலில் ஆரம்பித் திருக்க வேண்டும். ஆனால் தறிகெட்டு எங்கெங்கோ போய் விரும்பத் தகாத பல காரியங்களுக்கு அது வழி வகுத்து விட்டது. என்னைக் கேட்டால் ரேகிங் தேவையில்லை என்பேன். (உங்களைத் தவிர வேறு யாரும் என்னைக் கேட்கவில்லையே.)

✠ மு. சிவகுமார், அரியலூர்

கே: பொறுமையைச் சோதிப்பவர்களை என்ன செய்வது?

ப: அதுதான் தெரியவில்லை. தெரிந்திருந் தால் அடிக்கடி நுணுக்கி 50, 100 என்று ஒரு இன்லெண்ட்லெட்டரில் எழுதும் அரியலூர்- மு. சிவகுமாரை ஒரு கை பார்த்திருக்க மாட்டேனா!

✠ பி. எல். ராஜகோபாலன், பட்டுக்கோட்டை

கே: பல அர்த்தங்களைச் சொல்லி நிற்கும் "சும்மா" வைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்.

ப: "சும்மா"வை விட திறமை வாய்ந்த சொல் இது. இதோ ஒரு சாம்பிள்: மிஸ் டர் ராஜகோபாலன்! நீங்க சும்மாவைப் பத்தி ஒரு இது இதுங்கினீங்களே, அது ஒரு நல்ல இதுதான். இதுக்கு நல்லபடியா விரிவாக ஒரு இது இதுங்கணும்னு அதுக்கு ரொம்ப இது தேவைப்படும். பல பெரியவர்களின் இதுவிலிருந்து இதுகளை எடுத்து இதுங்க வேண்டும். அதற்கு வேண்டிய இதுவோ திறமையோ எனக்கு இல்லை என்கிற இதுவை நான் மனப் பூர்வமாக இதுங்கியாக வேண்டும்! ஆகவே இனிமேல் இது மாதிரி இதுவை யெல்லாம் என்னிடம் இதுங்காதீர்கள்!




✠ பி.வி. சீனிவாசன், சென்னை-25

கே: கடுகு பதில்கள் போன்ற பகுதிகள் கல்கி போன்ற தரமான பத்திரிகைக்குத் தேவை தானா?

ப: இல்லைதான். அதற்காக 64 பக்கங்கள் சினிமா நட்சத்திரங்கள் படம், வெட்டி ஒட்டும் போட்டியை உங்களுக்காக நடத்த முடியுமா?

✠ டி. கே. ஸ்ரீராம், பம்பாய் 62

கே: அடுத்த ஞானபீட விருது ஆர். கே. நாராயண னுக்கு அளிக்கலாமே.

ப: கட்டாயம் தரலாம். நகைச்சுவை இலக்கியத்துக்கு அதன் பிறகாவது உரிய மதிப்புக் கிடைக்கக் கூடும்.

✠ சி. எஸ். தங்கமணி, ஹைதராபாத்

கே: பெண்கள் வரதட்சிணை வாங்கும் காலம் வரப் போகிறது என்கிறேன்.

ப: உங்கள் மனைவி உங்களைக் கல்யாணம் செய்துகொண்டபோது தங்கம், மணி ஆகிய இரண்டையும் பெற்றுவிட்டதால் அப்படிக் கூறுகிறீர்கள், மிஸ்டர் தங்க மணி.

✠ எஸ். வி. ராஜசேகர், சேப்பாக்கம்

கே: கிசுகிசுவால் குவா குவா சப்தம் கேட்கிறதா?

ப: குவா குவா சத்தம் கேட்டால் அது கிசு கிசு அல்ல; சிசு சிசு!




✠ கே. எம். எல்லா ரெட்டி, கடம்பங்குளம்

கே: ஆடையின்றிப் பிறந்த மனிதன் ஆசையின்றியும் பிறந்திருந்தால் உலகம் எப்படி இருக்கும்?

ப: மனிதன் பிறக்கும்போது ஆசையின்றி யும்தான் பிறந்தான். எப்படி பின்னும் ஆடையைத் தேடிக் கொண்டானோ அதே மாதிரிஆசையையும் பற்றிக் கொண்டான்.

✠ உமாபதி, பழந்தண்டலம்

கே: குமுதத்தில் 'யார்' கதையை எழுதுவது யார் என்று உங்களுக்குத் தெரியுமா?

ப: தெரியும்.

பரிசு பெறுபவர்:

பி. எல். ராஜகோபாலன்,
11 சௌகண்டி தெரு
பட்டுகோட்டை 614601

## அத்தியாயம் 8

மாப்பிள்ளை ராஜாமணிக்குத் திடீரென்று பொழுது நகரவில்லையோ என்று சந்தேகம் வந்தது. வழக்கத்துக்கு மாருக மூன்றரை மணிக்கே மத்தியான நித்திரையை முடித்துக் கொண்ட அவர் அமைதியாகக் கட்டிலை விட்டு எழுந்தார். அறைக்கு வெளியே வந்து பார்த்தபோது நடமாட்டமே இல்லாதது இனம் தெரியாத பயத்தை அள்ளிக் கொட்டியது. அவரை நெருங்கி யாரும் தொந்தரவு செய்யக் கூடாது. ஆனல் யாராவது அருகே இருந்து கொண்டே இருக்க வேண்டும்.

இப்போது யாரும் இல்லை. கார்டியாலஜி கட்டிடமே உறங்கிக் கொண்டிருப்பதாகப் பட்டது. சாதாரணமாக ஆஸ்பத்திரிகளில் பிற்பகல் ஒரு மணியிலிருந்து நான்கு மணி வரை டாக்டர்களையோ மற்ற சிப்பந்திகளையோ காண முடியாது. அவரவர்கள் நன்ருக உண்டுவிட்டு ஓய்வு எடுத்துக் கொள்வார்கள். கூப்பிடற குரலுக்குப் பதில் கிடைக்காத நேரம் அது.

ராஜாமணி கட்டிலுக்கு வந்தார். அவர் மல்லிகாவுக்கு முதன் முதலாக விடுத்திருந்த விதிகளைச் சற்றே மாற்றியிருந்தார். மாலை நான்கு மணிக்கு அவள் திரும்பிப் பார்க்காமல் போய்விட வேண்டும் என்பதை மாற்றி, அவள் ஐந்து மணி வரை இருக்க வேண்டும் என்று கூறியிருந்தார். அன்று நான்கு மணிக்கும் வரச் சொல்லியிருந்தார்.

மணி மூன்று முப்பத்தைந்து. மல்லிகா நான்கு மணிக்கு வந்துவிடுவாள். நிச்சயமாக வந்துவிடுவாள். நல்ல பெண். பார்க்கத் துருதுருவென்றிருக்கிருள். இப்படிப்பட்ட பெண்ணின் தகப்பஞரின் பெயர் எப்படி நடேசன் என்று வாய்த்தது! நடேசன் என்ருலே அவருக்கு ஓர் எரிச்சல். அவரிடம் வேலை பார்த்த நடேசனைக் கேவலம் ஸெல்லறைக் காசுக்காக வேலையை விட்டு வெளியேற்றியதாகத்தான் எல்லோருமே நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். உண்மையான காரணம் அவருக்கு மட்டுமே தெரியும். நடேசன் ஜாதகம் பார்த்து ஜோசியம் சொல்லவில்லை. குச்சி மாதிரி உடம்பை வைத்துக் கொண்டு, ஆள் பயமோ பண பயமோ இல்லாமல் 'பட் பட்' என்று தான் கண்டதை முகத்தில் அடித்தாற் போல் சொல்லுகிருன். அவர் வீட்டு ஜாதகங்களையெல்லாம் ஒரு தடவை அவன் பார்த்தான். ஏன், அலசினுன். மாப்பிள்ளையின் மனைவிக்கு நெருப்பு மூலம் ஆபத்து. அவருக்குத் தண்ணீர் மூலம் கண்டம். (எந்தத் தண்ணீர்?) மூத்தபிள்ளை சொத்து விஷயமாக அவர் மீது வழக்குத் தொடருவானும். இரண்டாவது பிள்ளைக்குச் சித்தப் பிரமை பிடிக்க வாய்ப்பு இருக்கிறதாம். அர்ஜுனனின் பாபக் கிரகங்கள் நாசத்தின் அறிகுறிகளாம்.

இப்படியெல்லாம் சவு இரக்கமின்றி, நாக்கில் நரம்பு இல்லாமல் ஜோசியம் சொன்னல் எவன்தான் பொறுத்துக் கொள்வான்? தொட்டதற்கெல்லாம் சீறிவிழும் ராஜாமணி கம்மாவா இருப்பார்? எடுத்த எடுப்பிலேயே கோபத்தைக் காட்டி வேலையை விட்டு நடேசனை அகற்றினல் ஊரெல்லாம் அவரைப் பற்றிப் பேசிச் சிரிக்கும். ஏற்கனவே சிரிக்கிறனர்.

'நடேசா, எதுக்கும் உன் ஜாதகத்தையும் ஒரு தடவை நன்ருகப் பார்த்துக்கோ. ஒரு



வேலை போல இன்னொரு வேலை இருக்காது' என்று எச்சரித்துவிட்டு, தக்க தருணம் வரக் காத்திருந்தார். அதுவும் ஏழெட்டு நாட்களில் வந்தது. கணக்கில் ஆறே முக்கால் ரூபாய் துண்டு விழுந்தது. நடேசனுடைய வேலையும் துண்டிக்கப்பட்டது.

அந்த நடேசனை ஏன் இந்த மல்லிகா— அவருடைய மனத்துக்கு இதமாக இருக்கிற மல்லிகா நினைவுக்குக் கொண்டு வரவேண்டும்?

திடீரென்று ஆள் அரவம் கேட்டது. ஒரு விநாடி மல்லிகா தான் என்று புத்துயிர் பெற்ற மாப்பிள்ளை மறு விநாடியே கண்களை மூடிக் கொண்டு அதிகப் பெருமூச்சு விட்டார். காலோசையின் அநாகரிகம் நன்றாவே கேட்டது. தன் காலில் லாடம் அடித்த செருப்பு இருக்கிறது என்பதை ஒருவன் உணர்த்கிறான்.

மாப்பிள்ளை ராஜாமணி கண் மூடிக் கிடக்க சாமா உள்ளே வந்தான். இன்னும் ஐந்தாறு நிமிடங்களில் அர்ஜுனும் மல்லிகாவும் வந்துவிடுவார்கள். அதற்குள் அவன் ராஜாமணியுடன் பேசிவிட வேண்டும். ராஜாமணியும் அவனும் ஒருவரை யொருவர் என்றுமே விரும்பியவர்கள் அல்ல. ஆனால் ஒருவருக்கொருவர் தேவைப்பட்டார்கள். ராஜாமணியின் பற்பல வழக்கு விவகாரங்களைக் கவனித்துக் கொண்டு அவ்வப்போது தேவையான சீமைச் சரக்குகளை ஏற்பாடு செய்கிறவன் சாமா. சாமா வீட்டுக்கு அரிசி, தீபாவளி வேஷ்டி, புடவை அவ்வப்போது பணம் எல்லாம் கொடுக்கிறவர் மாப்பிள்ளை. தம் பலவீனங்களை அவன் அறிந்து வைத்திருந்ததால் அவனை நேரடியாக விரோதித்துக் கொள்ள மாப்பிள்ளையால் முடியவில்லை.

சாமா உள்ளே வந்தவன் கட்டிலைப் பிரதட்சணம் செய்தான். வியர்வை நாற்றமும், வெற்றிலைக் காவியின் பிரத்தியேகமான துர்வாசனையும் மூக்கைத் துளைத்தன. யார் என்று உடனே புரிந்துவிட்டது.

ராஜாமணி கண்ணைத் திறந்தார்.



''என்னடா மாப்பிள்ளை கண்ணைத் தொறந்தாயா.... தூங்காதவனையும் என்னால் எழுப்ப முடியும். பார்த்தாயா...''

''நான் இங்கே இருக்கேன்னு....''

''ஊர் பூராத் தெரியும். நீ போயிட்டேன்னு ஒரு வதந்தி பரவி ஒரு கல்யாணமே நின்னுபோக இருந்தது. நான்தான் தடுத்தேன்.''

''கல்யாணத்தையா?''

''இல்லேடா... பார்த்தாயா எப்படிப் பேசறேன்னு உனக்கே புரியறதா... உன் பிள்ளையைப் பார்த்தேன். ரொம்ப ஜாலியா இருக்கான்.''

''யார், அர்ஜுன்தானே?''

''பின்னே வேறு யார் உனக்குப் பிள்ளை? மூத்த பிள்ளை கத்தி கபடாவோட நிக்கறான். ரெண்டாவது பிள்ளையைப் பத்திக் கேட்கவே வேண்டாம். கொள்ளி வைக்கிற பிள்ளைக்குப் பின்னால் போக ரெடியா இருக்கான். அர்ஜுன்தான்....''

''அது சரி! ஆஸ்பத்திரிக்கு எதற்கு?...''

''ஆபரேஷன்.''

''உனக்கா...''

''ஹுஹும்.... எனக்கு இல்லே. என் ஹிரண்யாவுக்கு.''

''உன் வயத்திலேயும் குடல் இருக்குங்கற விஷயம் இப்பத்தான் தெரிஞ்சிருக்கு.''

''இத்தனை நாளா என்ன இருக்குன்னு நினைச்சுண்டிருந்தே?''

''அஞ்சாறு செட் பல். நீ வெளியே சிரிக்கிறபோது, அதெல்லாம் நறநறன்னு கடிக்கக் காத்திருமே....''

''நாம நம் யுத்தத்தை அப்புறம் வைச்சுக்கலாம். மாப்பிள்ளை ஒரு நியூஸ்!''

''என்ன?'' என்று மாப்பிள்ளை கேட்கவும் அவசர அவசரமாக மல்லிகா பிரவேசிக்கவும் சரியாக இருந்தது.

''என்னை மன்னிச்சுடுங்கோ ஸார். அஞ்சு நிமிஷம் லேட்டாயிடுத்து...'' சொன்னவள் சாமாவைப் பார்த்ததும் காலில் நெருப்புப் பட்டது போல் திடுக்கிட்டு நின்றாள். அவளும் அர்ஜுனும் சற்று முன்புதான் மவுண்ட் ரோடில் சாமாவைப் பார்த்திருக்கிறார்கள். அதற்குள்.....?

---

சிஷ்யன்: வருஷக்கணக்கா உங்களைப் பார்த்துக் கிட்டிருந்ததில் போரடிக்கப் போச்சு குருவே!

குரு: அதனாலே...?

சிஷ்யன்: ஒரு சேஞ்சுக்கு இன்று மட்டும் கமல் நடிச்ச குருவைப் போய்ப் பார்த்துவிட்டு வர்றேன் அனுமதி கொடுங்க!

- உ. ராஜாஜி



''டேய் சாமா.... உன் நியூஸை அப்புறம் சொல்லு.... இப்ப ஒரு கால் மணி நேரத்துக்கு வெளியே போ.. மல்லிகா ரெண்டு ரவுண்ட், ஒரு சாத்துக்குடி, உன் தோலை நீட்டா எடுத்து. தட்டிலே கனி மட்டும்தான் இருக்கணும். ஸ்பூனை நன்னு அலம்பணும். அப்புறம் 'சார்'னு கூப்பிடற வழக்கத்தை நிறுத்து.... என்டா சாமா நீ இன்னும் போகலே? போடா... போய் அப்புறமா வா''

''எப்ப வர்றது?''

''இவ அஞ்சரைக்குப் போயிடுவா. நீ ஆறு மணிக்கு மேலே வா.''

சாமாவால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அஞ்சாறு செட் பற்கள் நற நறத்தன. வெளியேறினான்.

வராந்தாவில் கொஞ்ச தூரம் நடந்தான். அர்ஜுன் திடீரென்று எதிர்ப்பட்டான்.

''நீ என்ன இந்திரஜித்தா. இப்பத்தான் உன்னை மவுண்ட் ரோட்லே பார்த்தேன்?'' என்றான் அவன்.

சாமா இளித்தான்.

''அப்பாவைப் பார்த்தாயா?''

''ஆமாம்.''

''மல்லிகா யார்னு அவர் கிட்டே சொன்னாயா?''

''இல்லே. அதுக்குள்ளே அவள் வந்துட்டா... உன் அப்பா என்னையும் கெட்-அவுட் பண்ணிட்டார்.''

''சொல்லப் போறியா?''

''சொன்னா என்ன தப்பு, அர்ஜுன்?''

''உன் முதுகிலே தோல் இருக்கணுமா வேண்டாமான்னு ஒரு முடிவுக்கு வா. அப்புறம் யோசிச்சுச் சொல்லு...''

''அர்ஜுன்... ஆரம்பத்திலிருந்தே நீ என்னை ஒரு வில்லனைப் பார்க்கிறே? ஏன்?''

''ஏன்னு உன் வாழ்க்கையிலே உன்னை ஹீரோவா என்னிக்குமே பார்த்தது இடையாது.... உன் வேலையே கிண்டு முடியற வேலை.. கோதண்டம் உன் பேச்சைக் கேட்டு மூணு மாசக் குழந்தையோடே பெண்டாட்டியைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பினான். சுந்தரம் ரெண்டு தம்பிகளையும் நடுத் தெருவில் நிறுத்தினான். என் மூத்த அண்ணா என் அப்பா மூஞ்சியை ரெண்டு வருஷமா பார்க்கலே... எல்லாம் உன்னால்...''

''அந்த மல்லிகாவுக்கு உன் அண்ணா தொழிற்சாலையில் வேலைக்குச் சிபாரிசு செய்தவன் நான்தான், அர்ஜுன். இது உனக்குத் தெரியாது. அவனுக்கும் தெரியாது...''

''சாமா, நீ ஒரு முட்டாள். காரணம் உன் சிபாரிசு இல்லே. மல்லிகா நடேசனுடைய பொண். என் அப்பா நடேசனை வெளியேற்றினார். அவர் பெண்ணுக்குத் தன் தொழிற்சாலையில் வேலை கொடுத்தா என் அப்பா தலை குனிவார்னு அண்ணா நினைச்சான்....''

''இப்ப நான் என்ன செய்யணும்?''

''நீ, உன் மூஞ்சி, உன் புகையிலை நாத்தம், உன் கைப்பை இதெல்லாம் இனிமே என் கண்ணிலே படப்படாது. என் அப்பா கண்ணிலே படப்படாது.''

''உன் அப்பா கிட்டே எனக்கு ஒண்ணு ரெண்டு காரியம் இருக்கு.... சத்தியமா மல்

லிகா யார்னு நான் அவர்கிட்டே சொல்ல மாட்டேன்... சத்தியமா!''

''நினைச்சா பாம்பு. நினைச்சா புழு!'' என்ருன் அர்ஜுன்.

பதில் சொல்லாமல் அவன் வெளியேற, அர்ஜுன் தந்தையின் அறையை நோக்கி நடந்தான்.

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது. அவன் பெயர் அடிபட்டது. அர்ஜுன் கதவருகே நின்ருன்.

''என் பிள்ளை முந்நூறு ரூபா சம்பளம்னு சொன்னுனே, எத்தனை நாளைக்குன்னு சொன்னுன்?'' — மாப்பிள்ளை.

''இல்லே.''

''இன்னும் பத்துப் பதினஞ்சு நாளிலே நான் ஊருக்குப் போனுலும் போயிடுவேன்.''

''சரி சார்...''

''அப்புறம் என்ன செய்வே... 'சாரை' நீ ஒழித்துக் கட்ட மாட்டே போலிருக்கு.''

''உங்க பிள்ளையே வேறு வேலை வாங்கித் தருவார்.''

''என் பிள்ளை கிட்டே நல்ல டேஸ்ட் உண்டு. அவன் என்னை மாதிரி.''

''புரியலே.''

''இல்லாமப் போனு உன்னை செலக்ட் பண்ணி யிருப்பானு? அது சரி, இப்ப நீ எங்கே போயிருந்தே? வீட்டுக்கா?''

''கடைக்கு.''

''என்ன வாங்கினே?''

''துணி.''

''ஸாரியா?''

''ஆமாம்.''

''ஸாரி வேணும்னு ஏன் சொல்லலே?''

''உங்க கிட்டச் சொல்லணும்னு தெரியாது.''

''மவுண்ட் ரோட்லே ஒரு பெரிய ஸொரத் ஷாப் இருக்கு. நீ ஒரு வார்த்தை சொல்லியிருந்தா அர்ஜுனேடே உன்னை அனுப்பி..''

''ஃப்ரீயாவா சார்...''

''உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு.''

''வீட்டிலே மாமி இருக்கா இல்லியா?''

மாப்பிள்ளை சிரித்தார்.

''அசடு அசடு... எனக்குப் பொண் பிறக்கவே இல்லே. மூணும் பிள்ளையாத்தான் பிறந்து தொலைஞ்சுது.''

''என்னை உங்க பொண்ணுத் தத்து எடுத்துக்கப் போறீர்களா?''

''ஊஹும்... எனக்கு ஒரு ஒண்ணு விட்ட அக்கா இருக்கா. அவளுக்கு ஒரு புள்ளை இருக்கான். பம்பாயிலே. ஃப்ளாட் இருக்கு. எம். டெக். ரெண்டாயிரம். அவன் ஜாதகத்தை வாங்கிப் பார்க்கிறேன்...''

''தாங்க்ஸ் சார்... உங்களுக்கு ஜாதகத்திலே நம்பிக்கை உண்டா?''

''என்ன செய்யறது? மனசு சஞ்சலப் படறது. இல்லாட்டா எதையும் லட்சியம் செய்யாம என் பிள்ளைக்கு என்னிக்கோ கல்யாணம் செய்து வைத்திருப்பேனே!''

''ஏன் சார்... என்ன கோளாறு?''

''யார் கிட்டேயும் சொல்லாதே... நான் ஏன் உன்கிட்டச் சொல்றேன்னு புரியலே. ஏதோ ஒரு பிடிப்பாக இருக்கலாம். என் பிள்ளைக்கு ஜாதகத்திலே செவ்வாய் எட்டிலே இருக்கு.''

''அது ஒண்ணு ரெண்டு லக்னத்திலிருந்து பனிரண்டுக்குள்ளே ஒரு நம்பரில இருந்துதானே ஆகணும்!''

''எட்டு கூடாது. கல்யாணம் ஆனுலும் சோபிக்காது.''

''என்ன ஆகும்?''

''பெண்டாட்டியை அடிக்கும். இல்லாமப் போனு பிரிச்சு வைக்கும். பாட்டிலை எடுத்து வை. ஐஸ் பாக்ஸ்லேந்து ஐஸ் எடு. சோடாவும் கிளாஸ் தம்ளரும் ஷெல்பிலே இருக்கு.''

''ஏன் சார், இந்த சிச்ருஷைக்கா எனக்கு மாசம் முந்நூறு ரூபாய்?''

''ஷெல்பிலே பட்டாணிக் கடலை இருக்கு. அதையும் எடுத்து வை. அப்புறம் ஒரு மணி நேரம் பொறுத்து வா. அஞ்சரை மணிக்குப் போறப்போ, ஞாபகப்படுத்து. அட்வான்ஸா ஒரு மாசச் சம்பளம் தரேன்.''

''சார் குடி கெடுதல் சார்.''

''வாழ்க்கையிலே நான் கசப்படாதவன் மல்லிகா... பணம் பங்களா, கார் தோப்பு எல்லாம் இருக்கு. ஆனு மூணு பிள்ளைகளிலே ரெண்டு சரியில்லே. எப்பப் பார்த்தாலும் கோர்ட், கேஸ், டாக்டர்னு பிராப்ளம். என் மனசுக்கு இதமா அர்ஜுனைத் தவிர யாரும் இல்லே. அவனுடைய அம்மா கூடத் தான்... மனசு வெறுத்துப் போனப்புறம் உடம்புக்கு எது நல்லது எது கெடுதல்?''

''ஆனு எப்பவும் சிரிச்ச முகமா...''

''ஊரை ஏமாத்தறேன்.... உள்ளே நான் புழுங்கறது ஏன் வெளியிலே தெரியணும்? சோடாவை எடு. என் கதையை அப்புறம் சொல்றேன்....''

''அதுக்கு முன்னுடி.....''

''என்ன?''

''எனக்கு ஜாதகத்திலே நம்பிக்கை கிடையாது சார்... எட்டாம் இடத்துச் செவ்வாய் என்னை எப்பவும் பயமுறுத்தாது சார்.''

வெளியே நின்றிருந்த அர்ஜுனன் ஒரு கணம் தன்னையே மறந்தான். (தொடரும்)

## பெரீய மோதகம்!



பிள்ளையார் பட்டியில் விநாயக சதுர்த்தியன்று ஒரு பெரிய மோதகம் செய்து படைக்கிறார்கள்:

18படி அரிசியில் ஒரே ஒரு மோதகம் மட்டும் செய்கிறார்கள். அதைச் செய்ய 3 நாட்கள் ஆகும்.

10 பேர் சேர்ந்து அதைத் தூக்குவார்கள். மறுநாள் அதைப்பிட்டு அடியார்களுக்கு வழங்குவார்கள்.

-'சோமலெ' எழுதிய ''இராமநாதபுர மாவட்டம்'' நூலிலிருந்து வ. தேனப்பன்




உங்கள் வாழ்வில் காதல் மலரட்டும்,
கொசுக்கள் மறையட்டும்.

டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்




கொசுக்களை விரட்ட சிக்கனமான வழி

டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்

காணவில்லை



அன்பு மகனே,
வீட்டிற்கு திரும்பிவா கண்ணே!
வீட்டிலிருந்த
கொசுக்களையெல்லாம் இப்போது
விரட்டியடித்துவிட்டோம்.
உன் அன்புத்தாய்

டார்ட்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்
கொசுக்களை விரட்டுகிறது, மனிதர்களை அல்ல.

டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போர்ட், பம்பாய்-400 023. போன்: 273831




இராமனும் சீதையும் காட்டுக்குச்சென்ற போது, அங்கு வாழ்ந்த மக்கள் தங்களுடைய இதயங்களைத் திறந்து ஆர்வத்துடன் பேசினர். அவர்கள் இராமபிரானிடம் ''இறைவா! நாங்கள் இரவு பகல் எந்த நேரத்திலும் பாவங்களைச் செய்து கொண்டிருக்கிறோம். திருட்டுத்தான் எங்கள் அன்றாடத் தொழில். எனினும் உடுத்துவதற்கு ஆடையும் உண்பதற்கு உணவும் போதுமானதாய் இல்லை. எங்களால் திருட்டுப் பழக்கத்தை விட முடியாது என்றாலும் உனக்கு முன்னால் நாங்கள் ஒரு முடிவுக்கு வருகின்றோம். இன்று வரை ஜடப் பொருள்களையே திருடிக்கொண்டிருந்தோம். அதற்கு மாறாக இன்று முதல் உன் அன்பைக் கொள்ளையடிப்போம். மனித உள்ளங்களைக் கொள்ளை கொள்வோம். அதிலிருந்து எங்கள் வாழ்க்கை மகிழ்ச்சி பொங்குவதாக மாறும். அந்த மகிழ்ச்சியில் பெரும் பணக்காரர்களாகி விடுவோம்'' என்றார்கள்.

அகங்காரம் தீய பண்புகளைச் சேர்க்கிறது. அகங்காரம் கொண்டவனின் கையில் ஆயுதங்கள் கிடைத்தால் அவன் பலமற்றவர்களைத் தொல்லைப்படுத்துகிறான். அதனால் குற்றம் புரிந்து சிறைக்கு வருகிறான்.

இந்த ஆணவத்தை விரட்டுவது மிகக் கடினம். ஆனால் அதன் திசையை மாற்றுவது எளிது. நீங்கள் இந்த அகங்காரத்தினால் பெருமைப்பட வேண்டுமானால் இப்படி எண்ணுங்கள்: ''நாங்கள் பாரத மக்கள். ஞானிகள், முனிவர்களின் வழித்தோன்றல்கள். இறைவனின் அம்சமான எங்களால் தவறுகளைச் செய்ய முடியாது. எளியவர்களைத் துன்புறுத்த மாட்டோம். எங்கள் வாழ்க்கையைச் செம்மையான செயல்களால் உருவாக்க வேண்டும். பலவீனமானவர்களைக் காக்க வேண்டும். ஏழைகளுக்கு உதவ வேண்டும் என்பதே எங்கள் கொள்கையாக இருக்கும்.''

தவறுகளை ஒப்புக்கொள்வது நம் வாழ்க்கைப் பாதையின் திசையை மாற்றி, இறைவனின் அருளைப் பெறுவதற்கான காரணமாகிறது.

அகலிகையை எண்ணிப் பாருங்கள். அவள் தவறு செய்தாள், சாபம் பெற்றாள், கல்லாக மாறினாள். கல்லான அகலிகையை ஒருவரும் பெயரிட்டுக்கூட அழைக்க மாட்டார்கள். அவளுக்கு அருகில் போக மாட்டார்கள். இந்நிலையில் அவள் ஒரு கல்லுக்குள் சிறைப்பட்டிருந்தாள்.

அவள் கற்சிறையில் இருந்தாலும் அவளுடைய ஆன்மாவின் ஆவல் உயிர்த் துடிப்புடன்தான் இருந்தது. அவளுடைய உள்ளத்தில் தன்னுடைய தவறுக்காக வருந்தும் உணர்ச்சி ஆறாக ஓடிக் கொண்டிருந்தது. அதனால் அவள் இடைவிடாது பொறுமையுடன் இராமனை வழிபட்டுக் கொண்டிருந்தாள்.

இதன் பயனாக ஏற்பட்ட சூழ்நிலை, இரக்க உணர்ச்சியை விசுவாமித்திரரின் புனித உள்ளத்தில் ஊற்றெடுக்கச் செய்தது. அதனால் அவர் ''அகலிகை இப்போது இராமபிரானின் அருளைப் பெறுவதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்தவளாக இருக்கிறாள்'' எனக் கூறுகிறார். இராமனே கல்வடிவிலிருந்து அகலிகையை மாற்றி உணர்வு கொடுக்க அவளை நோக்கி வரவேண்டியவனானான்.

செய்த தவறுக்காக இடைவிடாது வருந்தி இறைவனை வழிபடுங்கள். இறைவனை மறந்துவிட்டுத் தவறான வழியைப் பின்பற்றியதனால் நீங்கள் அவனிடமிருந்து விலக்கப்பட்டிருக்கிறீர்கள். விழிப்பு ஏற்பட்ட நேரத்தை உங்கள் வாழ்க்கையில் காலைப் பொழுதாகக் கருதுங்கள். இறைவன் உங்களை நோக்கி விரைந்து ஓடி வருவான். தன்னிடமிருந்து விலகிவிட்ட மகன் மனம் திருந்தித் தன்னை அடைவதை எந்தத் தந்தைதான் விரும்ப மாட்டான்?

(சபர்மதி சிறையில் குஜராத்தி ஞானி முராரி பாபு ஆற்றிய உரையின் ஒரு பகுதி.)

- தமிழில் தருபவர் திருமதி கலா கே. தாக்கர்




(10-8-80 ஆம் நாளன்று சென்னை இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடைபெற்ற கம்பன் விழாவில், கம்பன்- நிலம், நீர், நெருப்பு, காற்று, வான், மதி, கதிர், உயிர் என்ற தலைப்புகளில் நடைபெற்ற கவியரங்கில் கதிர் என்ற தலைப்பில் படிக்கப்பட்ட கவிதை.)

கம்பன்
நிலமல்ல.
அவனுடைய கவிச்சுவையில்
வறட்சிப் பிரதேச
வரைபடங்கள் கிடையாது.
கங்கையொடு மட்டும்
சங்கமித்துக் கொள்ளாமல்
கூவமாய்ச் சிலநேரம்
கூவுவதால்
நீரென்று கம்பனை
நினைத்தாலும் பொருந்தாது
அவன்
சிற்றினம் சேராத
சிந்தனை யாளன்.
நெருப்பு சில சமயம்
ஏழைகளின் அடுப்பை
எட்டியும் பார்க்காமல்
அவர்களது
குடிசைகளின் தலை மீதே
குதிக்கிறது.
ஆதலினால் கம்பன்
நியாயம் தெரியாத
நெருப்பல்ல.
அவனிடத்தில்
காற்றுப்போல் விசிறிவிடும்
கவிதை சுகம்
உண்டு என்பதெல்லாம்
உண்மைதான்!
ஆனாலும் அக்காற்றும்
தென்றலாய் வருகின்ற
தேவ வேளையில் தான்
மலர்களுக்குத்
தலை சீவி விடுகிறது.
புயலாய் வருகின்ற
பொல்லாத வேளையிலோ
மலர்களின் தலைகளை
சீவப்படுகின்றன.
கம்பன்
கலைநயங்கள் தெரியாத
காற்றல்ல

கம்பனை வானமென்று
காட்டுவதும் ஏற்காது.
வானம் —
வைர மழை விதையை
வைத்துக் கொண்டிருந்தாலும்
சில சமயம்
பதுக்கல் புரிந்து நமைப்
பட்டினிக்கும் ஆளாக்கும்.
கதிரிடத்தில் ஒளியைக்
கடன் வாங்கிக் கொள்கின்ற
நிலவென்று கம்பனை
நினைக்கவும் முடியாது.
அவனோ —
வார்த்தைக்கும் கற்பனைக்கும்
வளமான கருத்துக்கும்
எவரிடமும்
கைநீட்ட தேவையற்ற
கலைச்செல்வன்.
கம்பன் கவிதையின் முன்
நட்சத்திர வானத்தை
நகர்த்தி நாம் வைத்தாலும்
அது
அட்சய பாத்திரமாய்
ஆகிவிடாதா?
ஆயிரம் விளக்கேற்றும்
அழகான ராத்திரியும்
கதிரென்ற
ஒற்றை விளக்கின்
ஒளிக்கிணை யாகுமா?
கம்பனே நீயொரு
கதிரவன் தான்.
கடல் விட்டு எழுந்து வரும்
கதிர்! நீயோ
கவிச்சுவையின்
கடலையே தூக்கி வந்த
புதிர்!
வெளிச்சம் உன்னுடைய
வீட்டு விலாசம்.
பூமியை எழுப்பிப்
புத்துயிர் கொடுக்கும்
பகல் — உன்னுடைய
பரிசளிப்பு.
விழிப்பறவை சிறகடிக்க
வியப்பூட்டிக் கொண்டிருக்கும்
ஒளிப்பறவை நீ.
சூரியன்தான் நீ;
உன்னைச்
சுற்றி வருகின்ற
பூமிகள் நாங்கள்.
நீ கொடுத்த
தமிழின் போதை
தலைக்கேறிப்
போனதால்தான்
பூமிகள்
தன்னையே சுற்றித்
தடுமாறிக் கொண்டபடி
உன்னையும் சுற்றி
உலா வருகின்றோம்.

மு. மேத்தா




## அத்தியாயம் 60

# கடல் போர்

**லா** பூஷே என்று பிரசித்தமான காப்டன் விலாஸியரும் இந்திரஜித் அனந்தும் மேஜைக்குக் குறுக்கே அதன் மீது விரிந்து கிடந்த படத்துக்கும் குறுக்கே கைகளை நீட்டி, ஒரு கையை இன்னொரு கை அழுத்திப் பிடிக்க நின்றிருந்த காட்சி மூன்றாவது மனிதர்களுக்கு, சூக்ஷ்மமில்லாத புத்திகளுக்கு, வியப்பாயிருக்கலாம், காரணம் புரியாமலும் இருந்திருக்கலாம். ஆனால் அனந்தின் இருபுறமும் நின்ற பெண்களுக்கு அவ்விரு வீரர்களின் செய்கையில் எந்த வித வியப்போ குழப்பமோ இல்லை. அவர்களிருவரும் கூட லேசாகத் தங்கள் தலைகளை அசைத்தார்கள் புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக.

கைகளை இணைத்து நின்ற அந்த இரு கடல் வீரர்களின் கண்கள் கூட இணைந்து நின்றன சில விநாடிகள். டு கெதர் வீ வில் மேக் இட் (நாமிருவரும் இதற்கு முடிவு காண்போம்) என்று விலாஸியர் கூறிய பிறகு இருவரும் நீண்ட நேரம் மௌனமே சாதித்தாலும் அந்த மௌனத்திலும் அனர்த்தங்கள் புதைந்து கிடந்தன. வாய்கள் பேசாவிட்டாலும் இதயங்கள் பேசிக் கொண்டு தான் இருந்தன. சிறிது நேரம் கழித்து அனந்தின் கையிலிருந்து தனது கையை விடுவித்துக் கொண்ட விலாஸியர் சொன்னான்: ''நௌ வி கான் எக்ஸ்ப்ளெய்ன் த பொஸிஷன் டு த விமன் (இனி நிலைமையை நாம் பெண்களுக்கு விளக்கிச் சொல்வோம்)'' என்று.

இதைக் கேட்டதும் அதுவரை மௌனமாக நின்றிருந்த ராணி, சாரு இருவருமே மெல்ல, மதுரமாக, இகழ்ச்சி ததும்ப, நகைத்தார்கள். அவர்கள் நகைப்பைக் கேட்ட அனந்த் புன்முறுவல் கொண்டான். விலாஸியர் முகத்தில் மிதமிஞ்சிய பிரமிப்பைக் காட்டினான். ''வெல்வெல்! ஆம் ஐ டு டேக் இட் தட் யூ போத் அண்டர்ஸ்டாண்ட் த ஸ்ட்ராடஜி (பெண்களே! உங்களிருவருக்கும் நமது போர்த் தந்திரம் தெரிந்து விட்டதென்று நான் தீர்மானிக்கலாமா?)'' என்று வினவினான், பிரமிப்பு குரலிலும் விரிய.

இதற்குப் பதில் சாருவிடமிருந்து வரவில்லை. ராணியே பதில் கூற முற்பட்டு, ''காப்டன் விலாஸியர்! பெண்கள் என்றால் புத்தி கெட்டவர்கள், ஆண்களின் விளையாட்டுக் கருவிகள் என்று நினைப்பதைப் போல் அறிவு கெட்ட விஷயம் உலகத்தில் வேறு எதுவுமில்லை. ஐ கான் டெல் யூ யுவர் ப்ளான் இன் டிடெய்ல் அண்ட் இட் ஹாப்பன்ஸ் ஐ நோ மோர் அபௌட் த வெஸ்டர்ன் ஸீ போர்ட் தான் அய்தர் ஆப் யூ (உங்கள் திட்டத்தை நான் உங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியும். தவிர மேற்குக் கடற்கரையைப் பற்றி உங்கள் இருவரை விட எனக்கு அதிகமாகத் தெரியும்)'' என்று சொன்னாள்.

இதைக் கேட்ட விலாஸியரின் முகம் அதிக பிரமிப்பைக் காட்டியதென்றால் அடுத்தபடியாகப் பெரிய அதிர்ச்சி அவனுக்குக் காத்திருந்தது. ''ராணி! மேற்குக் கடற்கரையைப் பற்றிக் கூறியபோது நீ என்னை மறந்து விட்டாய். 'எனக்கு' என்பதை 'எங்களுக்கு' என்று நீ சொல்லியிருக்க வேண்டும்'' என்றாள் சாரு நிதானமாக.

விலாஸியர் சாருவின் மீது தனது அழகிய கண்களைத் திருப்பினான். ''உனக்கும் கடல் போர் பழக்கமுண்டா?'' என்று வினவினான் அதிர்ச்சி மிகுதியால்.

சாருவின் கவர்ச்சி மிக்க விழிகள் பக்கவாட்டில் அனந்தைப் பார்த்தன ஒரு விநாடி. பிறகு விலாஸியரின் கண்களைச் சந்தித்தன துணிவுடன். ''காப்டன்! தேர் ஈஸ் ஆன் ஓல்ட் ப்ராவர்ப் விச் ஸேஸ் எவ்வரி ஷிப் ஷுட் கம் டு இட்ஸ் ஹார்பர் ஒன் டே அண்ட் எவ்வரி வாக்ரண்ட் ஷுட் கம் ஹோம் ஸம் டே (காப்டன்! எந்தக் கப்பலும் ஒரு நாள் தனது துறைமுகத்துக்கு வர வேண்டும். திரியும் எந்த ஆண்மகனும் ஒரு நாள் இல்லம் திரும்ப வேண்டும். இப்படியொரு ஆங்கிலப் பழமொழி இருக்கிறது) அதனால் கப்பலுக்குக் கடல் எப்படி முக்கியமோ அப்படித் தரையும் முக்கியம். நான் தரைக் கோட்டைகளில் பழகியிருக்கலாம். ஆனால் அதைச் சார்ந்த கடற்பகுதிகள் தெரியாதென்பதில்லை'' என்று கூறிய சாரு ''நௌ லெட் மீ ஸீ வாட் வாஸ் கோயிங் இன் யுவர் மைண்ட் அண்ட் ஹிஸ் (இப்பொழுது பார்ப்போம். உங்கள் மனத்திலும் இவர் மனத்திலும் ஓடிய எண்ணங்கள் யாவை என்

---

சமீபத்தில் ஈரானில் இரண்டு ஆண்களும் இரண்டு பெண்களும் மீது விபச்சாரக் குற்றம் சாட்டப்பட்டு, மரணதண்டனையும் வழங்கப்பட்டது. தண்டனை செயலாக்கப்பட்ட விதம், மிகவும் கொடூரமாக இருந்தது. குற்றவாளிகளின் கழுத்து வரை மண்ணைப்போட்டுப் பள்ளத்தில் மூடி, பின் மதகுரு கற்களால் அவர்களின் முகத்தில் அடிக்கவே, அவர்களின் மண்டை உடைந்துவிட்டது. பின், டாக்டர், குற்றவாளிகள் மரணத்தை உறுதி செய்யவே, உடல் முழுவதும் மண்ணால் மூடப்பட்டது. -ஆதாரம்: 'டைம்' (14-7-80)

தகவல்: எஸ். ராஜேஸ்வரி

பதைக் கவனிப்போம்)'' என்றும் சொல்லிப் படத்தின் மீது குனிந்து தனது ஆள் காட்டி விரலை தேவ்கர் என்ற புள்ளியின் மீது வைத்தான். பிறகு ராணியைத் திரும்பி நோக்கினான். சரியென்பதற்கு அறிகுறியாக ராணி தலையசைத்தாள்.

சாரு தொடர்ந்தான்: ''காப்டன் விவா லியர்! தேவ்கர் என்று அழைக்கப்படும் தேவ்கட் அதாவது தேவகோட்டையில் காப்டன் மாக்ரே உங்களைச் சந்திக்க முயலலாம் என்பது உங்கள் ஊகம். அதில் தவறும் இல்லை. தேவ்கட் விஜயதுர்க்கத்துக்குத் தெற்கில் பம்பாயிலிருந்து நூற்றி எண்பது மைல் தூரத்தில் இருக்கிறது. தேவ்கட்டின் துறைமுகம் எந்தக் காலத்திலும் கப்பல்களால் அணுகக் கூடியது. இரு பக்கங்களிலும் இறங்கும் மலைப் பாறைகளால் அணைக்கப் பட்டது. துறைமுகத்தின் நுழைவாயில் அகலமானது துறைமுகத்தின் ஆழம் பதினெட்டு அடிகளுக்கு மேல் இருக்கிறது. நல்ல வாட்டமாக அமைந்துள்ள துறைமுகம் அது. * உக்கிரமான பருவ மழை பெய்யும் காலங்களிலும் கப்பல்கள் தேவகட்டில் நுழைந்து தங்க முடியும். பௌர்ணமியிலும் அமாவாசையிலும் துறைமுக ஆழம் பெரிதாயிருக்கும். வசந்த காலத்தில் அலைகளின் எழுச்சி ஒன்பது அடிகளுக்கு மேல் இருக்கும். இத்தனைக்கும் இந்தத் துறைமுகம் வெளியிலிருந்து யார் கண்ணுக்கும் புலப்படாது. அதனால்தான் மாக்ரே 'கடல் ராணி'யையும் அதன் துணைக் கப்பல்களையும் இங்கு எதிர்பார்க்கிறான். இந்த துறைமுகத்தின் நுழை வாயிலை அடைத்து விட்டால் உள்ளே இருக்கும் கப்பல்கள் வெளிவராது தடை செய்ய முடியும் என்று மாக்ரே நினைக்கிறான். ஆனால் அவனை வேறு வழியில் மடக்க நீங்கள் முயற்சிக்கிறீர்கள்.''

இவ்வண்ணம் அவர்கள் திட்டத்தையும் தேவகோட்டைத் துறைமுகச் சிறப்பையும் விளக்கிய சாரு ராணியை நோக்கி ''ராணி! தேவகட்டின் சரித்திரம் தெரியுமா உனக்கு?'' என்று வினவினான்.

கேள்வி ராணியை நோக்கிக் கேட்கப் பட்டதானாலும் அந்தக் கேள்வி தங்களுக்கும் ஏற்பட்டதென்பதை விவா லியரும் அனந்தும் புரிந்து கொண்டாலும் பதிலேதும் சொல்லாமல் மௌனமே சாதித்தார்கள்.

ராணி மட்டும் சொன்னாள்: ''எனக்குத் தெரியாது. சரித்திர ஆராய்ச்சியாளருக்குத் தெரிந்திருக்கலாம்'' என்று.

சாருவின் புருவங்கள் கேள்வி கேட்பன போல் மேலே எழுந்தன. ''ஆராய்ச்சியாளரா!'' என்று வினவினான் ஏதும் புரியாமல்.

''மாணவர் என்று சொல்லிக் கொண்டார்'' என்றாள் ராணி பதிலுக்கு.

''யாரவர்?'' சாரு விழித்தான்.

''இவர்தான்'' என்று அனந்தின் தோளைத் தொட்டுக் காட்டிய ராணி ''முதலில் சிந்து துர்க்கம் வந்தபோது அதன் சரித்திரத்தை விளக்க இவர் தவறவில்லை. தாம் ஒரு சரித்திர மாணவர் என்றும் சொல்லிக் கொண்டார்'' என்றும் கூறிய ராணி புன்முறுவல் செய்தாள்.

சாருவும் பதில் புன்முறுவல் செய்து, ''அப்படியா! சிந்து துர்க்கம் வந்ததும்

* Tailor's sailing Directory Page 390-"It is high water on full and change of the moon at eleven hours; the rise and fall is about nine feet at spring tides.






உன்னிடம் தனது ஆராய்ச்சித் திறமையைக் காட்டியிருக்கிறார் இவர்'' என்றாள்.

உரையாடலின் போக்கு அனாவசியத் திசையில் திரும்புவதைப் பார்த்த அனந்த் ''இந்த தர்க்கத்தைப் பிறகு வைத்துக் கொள்வோம். முதலில் தேவ்கட்டின் சரித்திரத்தைச் சொல்'' என்று கூறினான்.

''சரித்திரம் இப்பொழுது எதற்கு?'' என்று லிவானியர் வினவினான். எந்தச் சமயத்திலும் தெளிவாயிருக்கும் அவன் அழகிய வதனத்தில் கூட சிறிது குழப்பம் தெரிந்தது.

''சரித்திரம் நமக்குத் தெரியாத, நாம் பார்க்காத, பழைய உண்மைகளைக் கூறுகிறது. அது நமது திட்டத்துக்கும் கை கொடுக்கலாம்'' என்று அனந்த் கூறினான்.

அதற்கு மேல் லா பூஷே எந்த ஆட்சேபணையையும் கிளப்பவில்லை. ''சொல்லுங்கள்'' என்று சாருவை நோக்கிக் கூறினான். சாரு தேசப் படத்தில் தேவ்கட் இருந்த இடத்தில் தனது ஆள் காட்டி விரலை ஊன்றினான். ''இந்த தேவ்கட் பழைய காலத்தில் தமார் என்று அழைக்கப்பட்டது. இது அழகிய வட்டமான துறைமுகம் என்றும், அலை குறைவாக இருக்கும் சமயத்தில் பெரும் கப்பல்களும் இதில் நுழையலாம் என்றும் * பழைய பயண நூல்களில் காணப்படுகிறது. கப்பல்களுக்கு இந்தத் துறைமுகம் ஆதிகாலத்திலிருந்து பெரும் வரப்பிரசாதமாயிருந்திருக்கிறது. இந்தக் கோட்டை, இப்பொழுது ஓரளவு நிலத்தைத் தொட்டுக் கொண்டிருந்தாலும் ஆதி காலத்தில் கடலால் சூழப்பட்டிருந்ததால் இது ஜன்ஜீரா (கடற் தீவுக் கோட்டை) என்று அழைக்கப்பட்டது'' என்று கூறினான். ''இப்பொழுது இது நிலத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதால் ஓர் அபாயம் இருக்கிறது. இந்தத் துறைமுகத்தில் நீங்கள் தங்கினால் தரை பீரங்கிகள் மூலம் உங்கள் கப்பல்கள் தாக்கப்படலாம்'' என்றும் சுட்டிக் காட்டினான்.

மற்ற மூவரும் மிகுந்த வியப்புடன் சாருவை நோக்கினார்கள். சரித்திரத்தை விவரித்ததால் தேவ்கட் துறைமுகத்தில் தங்குவதால் ஏற்படக் கூடும் ஆபத்தை சாரு விளக்கியதால் எல்லோரையும் விட இந்திரஜித் பிரமித்தான். ''சாரு! உனக்கு இவ்வளவு ஆரம் சரித்திர ஆராய்ச்சி இருக்குமென்று எனக்கு இந்த விநாடிவரை தெரியாது'' என்று தனது பாராட்டுதலைத் தெரிவித்தான்.

ராணியின் முகம் சிவந்தது. ''இப்பொழுது தெரிந்துவிட்டதல்லவா?'' என்று வினவினாள் சிறிது சினம் குரலில் தொனிக்க.

அனந்தின் புத்தி எங்கோ வேலை செய்து கொண்டிருந்ததால் ''புரிந்து விட்டது'' என்று கூறினான்.

''சரி, உங்கள் ஆராய்ச்சி நடக்கட்டும். நான் போகிறேன்'' என்று அறையை விட்டுக் கிளம்ப முற்பட்டாள்.

''சரித்திர ஆராய்ச்சி முடிந்துவிட்டது. நீ இவரை அழைத்துப் போகலாம்'' என்றாள் சாருவும் சினத்துடன்.

''எதற்கு?''

''உனக்குத்தான் தெரியும்.''

''உனக்குத் தெரியாதோ?''

''தெரிய அவசியமில்லை.''

''ஏனோ?''

''ராணி இருக்கும்போது சாதாரணப் பிரஜைகளை யார் விரும்புவார்கள்?''

''விரும்பாமலா மலைக் குடிசைக்கு வந்தார்?''

''வந்து என்ன பயன்? அங்குந்தான் நீ தொடர்ந்து வந்து விட்டாயே?''

இதைக் கேட்டதும் ராணி வெகுண்டெழுந்தாள். ''சாரு! பேசுவதைச் சிந்தித்து பேசு'' என்றாள் உஷ்ணம் ஒலித்த குரலில்.

''அந்தப் பாடத்தை உனக்கே திருப்பிப் படித்துக்கொள்'' என்றாள் சாரு.

''என்ன சொன்னாய்?'' என்று ராணி அனந்தின் உடலுக்குக் குறுக்கே சாய்ந்து சாருவைப் பிடிக்க முயன்றாள்.

''ராணி! எங்கே பார்ப்போம் உன் சாமர்த்தியத்தை'' என்று கூறிக் கொண்டே ராணியின் மேலாடையைப் பிடித்தாள்.

ராணியும் சாருவின் மார்பை மறைத்த சட்டையைப் பிடித்தாள்.

லிவானியர் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தான். ''அனந்த்! கடற்போர் துவங்கிவிட்டது. நீ தப்பித்துக்கொள்'' என்றான்.

அனந்தும் பொறுமை இழந்தான். இரு பெண்களின் கைகளையும் இரு கைகளால் பிடித்து இறுக்கினான். விலக்க முயன்றான். ஆனால் இரு பெண்களின் வலுவும், ஆக்ரோஷமும் அவன் முயற்சியைத் தோற்கடித்தன. இருவர் திமிறலும் அதிகமாயிருந்தது. ''ராணி! சாரு!'' என்று உறுமிய அனந்த் இரு பெண்களையும் இரு கைகளாலும் இறுக அணைத்தான் சிற்றிடைகளைப் பலமாக வளைத்து.

இதைக் கண்ட லிவானியரும் தனது இயற்கையான பிரெஞ்சுக் குணத்தைக் காட்டினான். ''தட் ஈஸ் ரைட் அனந்த். ஹக் தெம் ஸ்ட்ராங், க்ரஷ் தெம்'' என்று மிகுந்த மகிழ்ச்சியுடன் கூவினான். (தொடரும்)

* Prim, Rot Da costa da India, Page 23 - Mentioned as Toperon both by Ptolemy and periplus. Refer Mccrindle's Periplus, page 129.





# "எப்படி தைரியம் வந்தது?"

## சிந்தனைச் சிதறல்கள்

'மூன்றெழுத்து' தான் நான் முதன் முதலில் வசனம் பேசி நடித்த படம். இயக்குனர் ராமண்ணாவை என் தாயாருக்கு நன்கு தெரியும். ராமண்ணாவின் காரியதரிசியாக இருந்த மாப்பிள்ளை என்பவர் என் தாயாரின் ஒன்று விட்ட சகோதரர். அவர் வந்து கேட்க ராமண்ணாவின் படத்தில் நான் நடிக்க வேண்டுமென்று யாவரும் விரும்பியதால் இரண்டாவது கதாநாயகி வேடமானாலும்சரி என்று ஒப்புக்கொண்டேன். எடுத்த எடுப்பில் ஊட்டியில் வெளிப்புறப் படப்பிடிப்பு. எனக்குக் கையும் ஓடவில்லை காலும் ஓடவில்லை. கேமிராவின் முன்னால் எனக்கு என்றுமே பயமோ கூச்சமோ ஏற்பட்டதில்லை. கைகால் நடுங்கியதற்கான காரணம் அந்தக் காட்சி எடுக்கப்பட்ட விதம். ஏரியின் மத்தியில் நாலைந்து சிறு படகுகளை ஒன்றாகக்கட்டி நடன நடிகைகளுடன் என்னை நடுவில் நிற்க வைத்து விட்டார்கள். கரையில் ஒலி பெருக்கியை வைத்துக் கொண்டு இப்படி ஆடவேண்டும் அப்படி ஆட வேண்டும் என்று சத்தம் போட்டுச் சொல்லிக் கொண்டிருந்தார் நடன மாஸ்டர் — மறைந்த மலேஷியா மகாலிங்கம். எப்படி அசைந்தாலும் போட் ஆடியது. நான் பயத்தால் நடுங்கியதில் வியப்பென்ன? போதாக் குறைக்கு பாட்டு நடனம் முடிந்தவுடன் தண்ணீரில் நான் குதிக்க வேண்டும் என்றார்கள்.

ராமண்ணா ஒலிபெருக்கியில் "வித்யா! தண்ணீரில் விழு வித்யா தண்ணீரில் விழு" என்று கத்தினார். அந்த வினாடி வரை அப்படி ஒரு சீன் படத்தில் இருப்பதாக எனக்குத் தெரியாது. நான் உண்மையைக் கத்திச் சொன்னேன். "சார், எனக்கு நீச்சல் தெரியாது!" "நாங்கள் காப்பாற்றுகிறோம். நீ விழு! நாங்கள் காப்பாற்றுகிறோம்!" — இது ராமண்ணாவின் குரல். சொல்கிறாரே என்று நானும் தண்ணீரில் குதித்தேன். ஒரு படகுக் காரனைத் தண்ணீருக் கடியில் நிறுத்தி வைத்திருந்தார்கள். தம் பிடித்துக் கொண்டு கீழே நின்றிருந்த அவர் நான் குதித்தவுடன் என்னைப் பிடித்து உயர்த்திப் படகிலேற உதவினார். ஊட்டித் தண்ணீரில் குதித்த சில வினாடிகளிலேயே கைகால், விறைத்து விட்டது. கரை சேர்க்கப்பட்ட

**ஸ்ரீவித்யா**

- ✖ மெரிலாண்ட் சுப்பிரமணியம்
- ✖ சத்யன்
- ✖ டி. ஆர். ராமண்ணா





என்னைப் பார்த்து ரவிச்சந்திரன், ''எப்படித் தண்ணீரில் குதித்தாய்? எப்படி தைரியம் வந்தது?'' என்று வியந்து கேட்க, ''குதிக்கச் சொன்னார்கள் குதித்தேன்'' என்றேன் நான். ''குளிரவில்லையா?'' என்றார் அவர், சற்றுக் கலக்கத்துடன். ''இல்லையே'' என்று கூறியவுடன் ரவிச்சந்திரன் சென்றார். சில நிமிடங்களுக்குப் பிறகு அவர் 'வெட வெட'வென்று நடுங்கிக் கொண்டே வந்தார்! அப்போதுதான் அவரும் தண்ணீரில் குதிப்பது போல் படமெடுத்திருக்கிறார்கள் என்று தெரிந்தது! அதற்காகத்தான் முன்னதாக என்னைப் பார்த்துப் பேசி என் அனுபவத்தைத் தெரிந்து கொண்டு போயிருக்கிறார். ''என்ன சார்! எப்படிக் குதித்தீர்கள்? எப்படி தைரியம் வந்தது?'' என்றேன். ''குதிக்கச் சொன்னார்கள் குதித்தேன்'' என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

பப்பி அம்மாவின் வீட்டில் வைத்துத்தான் நான் மெரிலாண்ட் சுப்ரமண்யத்தைப் பார்த்தேன். என்னைப் பார்த்த அவர் ''நீ பார்க்க நன்றாக இருக்கிறாயே. நான் ஒரு படம் எடுக்கிறேன். சத்யன் அவர்களை வைத்து. அதில் நீ நடிக்கிறாயா?'' என்றதும் எனக்கு ஒரே சந்தோஷம். ''சரி'' என்று அப்பொழுதே கூறிவிட்டேன். 'தலைசிறந்த மலையாள நடிகர் சத்யனுடன் நாம் நடிக்கப் போகிறோம்' என்ற எண்ணமே என்னை மகிழ்ச்சி கொள்ளச் செய்தது. அதுதான் நான் கதாநாயகியாக சத்யனுடன் நடித்த முதல் படம். முதல் ஷெட்யூலுக்கு எங்கள் குடும்பமே சென்று பார்த்தது. நியூ தியேட்டர் பக்கத்தில் படப் பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. அந்தத் தியேட்டரில் 'பூஜா புஷ்பம்' என்ற மலையாளப் படம் ஓடிக் கொண்டிருந்தது. தினமும் படப் பிடிப்பு முடிய வேண்டியது. இரவுக் காட்சிக்குப் போய் உட்கார வேண்டியது. இப்படி சுமார் 18 தடவை அப்படத்தைப் பார்த்திருக்கிறேன். தியேட்டர் காம்பவுண்டுக் குள்ளேயே எங்களுக்கு க்வாட்டர்ஸ். அதற்கு எதிர்த்தாற்போல் அவர் வீடு. ஒவ்வொரு நாளும் அப்படத்தைப் பார்க்கக் கூடாது என்று படப் பிடிப்புக்குச் செல்லும்போது நினைத்துக் கொள்வதுண்டு. ஆனால் ஆசை யாரை விட்டது?

அதை அடுத்து அவர் எடுத்த படம் ''குமார சம்பவம்''. அந்தப் படத்தில் பப்பி அம்மாவும் ஜெமினி கணேசனும் நடிக்க, நானும் ராஜஸ்ரீயும் ஒரு நடனமாடினோம். 38 மணி நேரம் இடைவிடாமல் படப் பிடிப்பு நடந்தது. என்னுடைய பதிமூன்று வருட சினிமா உலக அனுபவத்தில் 38 மணி நேரம் இடைவிடாத படப்பிடிப்பில் கலந்துகொண்டது இதுதான். காரணம் ராஜஸ்ரீக்கு எங்கோ போக வேண்டும். எனக்கு வேலூரில் நடனம். ரயிலைப் பிடித்தாக வேண்டும்.

அடுத்து நான் நடித்தது ''ஸ்வப்பனங்கள்'' என்ற மலையாளப் படம். இப்படம்தான் வின்சென்டின் முதல் படம். வின்சென்டும் நானும் ஜோடிகள். மதுவும் கீதாஞ்சலியும் ஜோடிகள். ஆங்கிலத்தில் வெளிவந்த Wait until Dark என்ற படத்தைத் தழுவி மலையாளத்தில் எடுத்தது. கீதாஞ்சலியின் தகப்பனார் எனக்கு ஜோசியம் பார்த்தார். அப்பொழுதுதான் முதல் முறை என் கையை ஒருவரிடம் காட்டினேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா?

பேட்டி : ''சலன்''

● பா. ரா. 'காமராஜர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது ஏதாவதுகருத்து சொன்னாரா?' என்று கேட்கிறார். 'அவர் இறந்த பிறகு கருத்து ஏதாவது சொன்னாரா?' என்று கேட்டாலும் கேட்பார். சூழ்நிலை அப்படி இருக்கிறது! இவர் எதற்காக கொள்கை, நேர்மை, சத்தியமூர்த்தி பவன் ஆகியவற்றை அடகு வைத்தார் என்பது விரைவில் தெரியப் போகிறது. பதவிப் பிச்சை 'அம்மன்' அருளால் கிடைக்கட்டும்!
செங்கவல்லி இ. முருகவேள்

● தெறுண்ட தேசிய சக்திகள் மீண்டும் ஒன்று சேர்வதற்கான சூழ்நிலையை ஏற்படுத்த பா. ரா. அவர்களின் முடிவு பெரிதும் உதவும். காலங் கடந்தாயினும் பிரத்யட்ச நிலையை உணர்ந்து செயல்படும் பா. ரா. பாராட்டுக்குரியவர்.
சென்னை–61 வி. ஜி. நேசன்

● சுப்ரபாலன் எழுதிய 'ஒரு காகிதத்தின் மரணம்' சிறுகதை தமிழ்நாட்டில் நூற்றுக் கணக்கான ஓய்வுபெற்றவர்களின் நிலைமையை எடுத்துக் காட்டும்படி அமைந்திருக்கிறது. நான் மே 1979ல் வேலையிலிருந்து ஓய்வு பெற்றிருந்தும் நாளதுவரை எனக்குச் சேர வேண்டிய பிராவிடென்ட் தொகையோ ஓய்வு ஊதியமோ இன்னும் கிடைக்கவில்லை. நாட்டில் எத்தனை புலிப்பல்பாளையம் சாமி வேலுக்களோ! அலுவலகத்தில் வேலை பார்க்கும் இளைஞர்கள் தாங்களும் பிற்காலத்தில் ஓய்வு பெற வேண்டியவர்கள்தாம் என்பதை நினைத்துப் பார்த்துப் பணி புரிந்தால் நலமாக இருக்கும்.
மணப்பாரை ஆர். சுப்ரமண்யம்

● ''மென்மையால பெண்மையைச் சுற்றி இப்படி ஓர் இரும்புச் சுவரா?'' - எவ்வளவு அழுத்தமான வாக்கியம். (சிலர் உள்ளே இருக்கிறார்கள்) கோவி. ஜெயராமன் தமது முதல் கதையிலேயே என்னைக் கவர்ந்து விட்டார்.
விருத்தாசலம் கே.ஜி. இராதாகிருஷ்ணன்

● ''அவனுக்கென்ன மகராசி'' சிறு கதை என் வாழ்வில் நடந்த சம்பவத்தினைப் போலவே இருந்ததால் கதையை படித்து முடித்ததும் கண்கள் குளமாயின.
பழைய பல்லாவரம் எஸ். வி. ராம்சேகர்

● 'காட்டில் ஒரு காதல்' படித்தேன். காண்டா மிருகத்தின் கொம்புக்கு விஷத்தைக் காட்டிக் கொடுக்கும் தன்மை உண்மையிலேயே உள்ளதா? அல்லது கதைக்கிறாரா?
சென்னை-11 மணிமகன்

● கல்கி என் சொந்த ஊரான வத்தலக்குண்டு வெடி விபத்து பற்றிய செய்திகளை வெளியிட்டதின் மூலம் எங்கள் ஊர் மக்களுக்கே ஆறுதல் கூறியிருக்கிறது: இதனை நன்றியுடன் நான் நினைவு கூர்கின்றேன்!
வீரபாண்டி வதிலை அன்புச் செல்வன்

● 'ஜானி' விமர்சனம் படித்தேன். நான் எதிர்பார்த்த அளவை விட நன்றாகவே பாராட்டியுள்ளீர்! கற்பூரத்தின் வாசனை அறிந்த ஆள் நீர் ஒருவர்தானய்யா!
மதுரை-11 என். ஹரிஹரன்

● படங்களுக்கு சென்஭ார் சர்டிபிகேட், 'ஏ'யாயிருந்தால் என்ன? 'யு'வாக இருந்தால் என்ன? எந்தச் சிறுவர் சிறுமியராவது 'ஏ' காரணமாக அனுமதி மறுக்கப்பட்டிருக்கிறார்களா?
மதுரை-2 ஸ்ரீதர்

● கேள்வி-பதில் பகுதியில் கப்பலுக்கு முன்னால் 'எம்.வி.' என்ற எழுத்துக்களைப் போடுவது மோட்டார் வெஹிகிள் என்பதைக் குறிக்கிறது என்று கடுகு பதில் கூறியுள்ளார். அது தவறு. எம்.வி. என்பது மாஸ்டர் வெசல் என்பதன் சுருக்கம்.
கொச்சி ஷே. ஹாஜா நஜ்முதீன்

# வட்டமேஜை!



● பஸ் விபத்துக்கள் பற்றி இரு நா. மகாலிங்கம் பேட்டி படித்தேன். பஸ்கள் எந்த அளவுக்குப் பத்திரமானவை என்று நான் ஆராய்ந்து அறிக்கை தயாரித்துள்ளேன்.

விபத்து நேர்ந்தாலும் பயணிகளுக்கு அதிகமாகக் காயம் படாதிருக்க பஸ்ஸின் உட்புறத்திலும் ஆசனங்களின் அமைப்பிலும் பல மாற்றங்களைச் செய்யலாம்.

பயணிகள் வசதியை விட டிரைவர் வசதி முக்கியம். பல பஸ்களில் டிரைவர் ஆசனம் அவர் உயரத்துக்கு ஏற்ப ஏறவோ இறங்கவோ முன் பின் நகரவோ செய்யாது. மழை பெய்தால் ஒரு வைப்பர்தான் வேலை செய்கிறது. இப்படி எத்தனையோ குறைகள்.

டிரைவருக்குச் சரியான பயிற்சி தராமல் வசதியாக அமரவும் ஓட்டவும் வழி செய்யாமல் இருந்துவிட்டு விபத்து நடந்தால் அவரைக் குறைகூறிப் பயனில்லை. களைப்புற்றிருக்கும் டிரைவரால் எப்போதுமே ஆபத்துத்தான்.
சென்னை பி.ஜே. மானுவேல்

# தங்கையைப் பிரிந்து....

இவ்வளவு பிரியமாக ஒரு அண்ணனும் இருந்திருக்க முடியாது. அவ்வளவு ஆசையுடன் ஒரு தங்கையும் இருந்திருக்க முடியாது. நகமும், சதையும் போல உறவு. அவனுக்கு அழுகை வந்தால் அவள் கண்களிலும் நீர் முட்டும். அவனுக்குச் சந்தோஷமென்றால் இவளுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வரும். வயக்காட்டிலிருந்து வரும் போதே, ''தங்கச்சி... சாப்பிட்டியாம்மா?'' எனக் கேட்டபடியேதான் ரகுபதி வாசல் படி ஏறுவான். ''நீ வராம எனக்கென்னண்ணு அவசரம்?'' என்றுதான் லட்சுமியும் பதில் சொல்வாள்.

பார்க்கிறவர்கள் அதிசயித்துப்போவார்கள். ''இவ்வளோ ஒட்டுதலா இருக்கிறவங்களைக் கல்யாணத்துக்கு அப்புறம் பார்க்கிறேனே'' என்று சிலர் கேலி செய்வார்கள்.

இன்றைக்கு அந்த வாக்குப் பலித்துவிட்டது.

முகூர்த்தமும் மற்ற சடங்குகளும் முடிந்து கழுத்தில் ஏறிய புது நாணும், பட்டுப் புடவையுமாக லட்சுமி புருஷனுடன் புறப்பட நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

ரகுபதிக்கு ஒரு வேலையும் ஓடவில்லை.

ஆசையாக, வகையாக 'இது தங்கச்சிக்கு' எனப் பொருள்களைச் சேர்த்து வைக்கும் போதிருந்த உற்சாகம் போய், 'சட்'டென்று உடைப்பெடுத்துக் கொண்ட பெரும் துக்கம் அவனை ஆட்கொண்டது.

''ஜல்தியாகட்டும்ப்பா... நல்ல நேரம் போயிடப் போவுது'' விசேஷத்திற்கென்று முக்கியத்துவம்பெற்றிருந்த சில பெரியவர்கள் அவசரப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

''இதோ....ஆயிருச்சுங்க....''

ரகுபதி அங்கும் இங்குமாக ஓடினான். எதையோ நினைத்துக் கொண்டு வேறு எதையெல்லாமோ செய்தான். அவனைப் போலவே துக்கமாயிருந்த அவனது பெற்றோரைத் தவிர மற்ற எல்லோரும் சந்தோஷமாகவே இருந்தார்கள். காரியங்களை அவர்கள் கவனித்துக் கொண்டனர்.

சம்பிரதாயப்படி முதலில் வண்ணப் பாயும் தலையணையும் போயிற்று. அடுத்து பழக் கூடை, சீர் வரிசைகள். கடைசியாகப் பணியாரக் குடம் ஏற்றப்பட்டதும் மாட்டு வண்டியில் பெண்ணும் மாப்பிள்ளையும் உட்காருவதற்கு மட்டுமே காலி இடம் இருந்தது.

மாப்பிள்ளை குத்துக்கல்லாக நிற்க, தங்கை லட்சுமி மட்டும் காலில் விழுந்து, ''போய்ட்டு வர்றேண்ணே....'' என்றாள். விசும்பலுக்கு இடையே வார்த்தைகள் தெளிவில்லாமல் வந்தன.

ரகுபதிக்கு மரத்தை வேரோடு பிடுங்கியதைப் போலிருந்தது. பெரும் துக்கமாயிருந்தது. அது என்ன உறவு? இதற்காகவா ஒருவன் இவ்வளவு கஷ்டப்பட்டு வளர்க்க வேண்டும்? ஒவ்வொரு இலையாகத் துளிர் விடுவதைப் பார்த்துச் சந்தோஷிக்க வேண்டும்?

''போய்ட்டு வாம்மா....''

இதைச் சொல்லும்போது அவனுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது.

கொஞ்ச நேரத்தில் வண்டி புறப்பட்டு விட்டது.

ஒரு வாரம் கழிந்திருக்கும்.

ரகுபதிக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை.

நொடிக்கொரு தரம் ''அண்ணே அண்ணே' என்ற அழைப்புக் குரலுடன் 'சரக் சரக்' கெனப் பாவாடை உரச இங்கு மங்குமாக வீடு நிறையத் தான் இருப்பதைப் போல— லட்சுமி உலாவுவதைக் காணாமல் மனத்தில் வெறுமை தட்டிக் கொண்டிருந்தது.

அதற்கு மேல் தாளாமல் ரகுபதி எட்டாம் நாள் இரவு ''நான் போய் பார்த்து வந்தாத் தான் ஆச்சு'' என வீட்டில் உள்ளவர்களிடம் அடம்பிடித்துப் புறப்பட்டு விட்டான்.

அந்நேரத்தில் இரண்டு மைல் நடந்து போய், பக்கத்து ஊரில் ரயிலேறி, டவுனில் இறங்கியதும், பலகாரக் கடையைத் தேடி, தங்கைக்குப் பிடித்தமான பலகாரங்களை வாங்கிக்கொண்டு, சம்பந்தி வீட்டுக் கதவைத் தட்டியபோது, பொழுது நன்றாக விடிந்திருந்தது. அவனது குரலைக் கேட்டதும் லட்சுமியே ஓடிவந்து கதவைத் திறந்தாள்.

''வாண்ணே....''

வாஞ்சையுடன் அவள் வரவேற்பது காதுகளில் விழு முன், மருதாணிச் சிவப்புக்கூட மறையாத கரங்களில் சாம்பல் கறையுடன் அவள் நின்ற கோலம்தான் ரகுபதியின் கண்களுக்கு முதலில் பட்டது.

''என்னம்மா...நீயா பத்துத் தேய்க்கிறே? வீட்டில் ஒற்றைப் பெண்ணாகச் செல்லமாக அவள் வளர்ந்தது நினைவுக்கு வர, அதிர்ச்சியுடன் வினவினான்.

''ஆமாண்ணே... செஞ்சா என்ன? உள்ளே வா....'' சிரித்துக் கொண்டே அவள் அழைத்தாள்.

''ஏன் இங்கே வேறே ஆள் இல்லையா? இதுக்காகத்தான் கட்டிக்கிட்டு வந்தாங்களா?'' அவனுக்கு ஆத்திரம் தணிகிற பாடாயில்லை.

''ஷ்ஷ்...பக்கத்து ரூம்லேதான் அத்தை இருக்காங்க. சத்தம் போடாதே...''

''ரொம்பப் பெரிய மனுஷிதான் போ...''

அண்ணனும் தங்கையும் பாயில் அமர்ந்தார்கள். குடும்பச் சங்கதிகளை ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொண்டார்கள். வீட்டில் இருந்ததை விட இங்கு அவள் சற்று கலகலப்புடன் பழகுவதாக உணர்ந்தான்.

விஷயம், தொனி, சிரிப்பு எல்லாவற்றிலுமே புது தோரணை இருப்பதாகவும் பட்டது. ஏன் அப்படி? ஒரு வாரத்துக்குள் இன்னொரு லட்சுமியா பிறந்து விட்டாள்?

ரகுபதி தான் வாங்கி வந்திருந்த பலகாரப் பொட்டலத்தைப் பிரித்து. ''சாப்பிடும்மா'' என்றான்.

''அய்யே... என்னண்ணே இது? வீட்டுக்குப் பெரியவங்க இருக்கறப்போ எங்கிட்டக் குடுக்கிறீங்க?...'' லட்சுமி 'விசுக்' கென்று எழுந்து அத்தையைக் கூப்பிடப் போனாள்.

''என் தங்கையா இது?''

ரகுபதிக்குச் 'சப்'பென்றிருந்தது.

வீடும், குடித்தனமும் அமைந்துவிட்டால் இப்படித்தான் இருக்க வேண்டும் எனக் காலம் காலமாக நிர்ப்பந்தித்து ஏற்றப்படுகிற ஒரு சுமை, தன் தங்கையின் மீதும் ஏற்றி வைக்கப்பட்டிருப்பதாக அவன் நினைத்துக்கொண்டான்.

கொஞ்ச நேரம் பொறுத்துத் தூங்கி எழுந்த முகத்துடன் மாப்பிள்ளை வந்தார். ஒப்புக்கு ஏதோ இரண்டு வார்த்தை பேசிவிட்டுப் பின் பக்கம் போனார். லட்சுமியும்' அண்ணனை விட்டுவிட்டுப் புருஷனுக்குப் பின்னாலேயே ஓடினாள். குளிப்பதற்கு நீர் எடுத்து வைத்துவிட்டுத் திரும்பி வந்தாள். சற்றைக்கெல்லாம் டிபன் தயாராகியது.

''வாண்ணே சாப்பிடலாம்...''

மாப்பிள்ளையும் அவனும் அமர்ந்தார்கள்.

''நீயும் உட்காரும்மா....''

''இல்லே. நீங்க முடியுங்க. நான் அப்புறமாச் சாப்பிட்டுக்கிறேன்.''

எவ்விதச் சலனமும் இல்லாமல் அவள் தட்டிக் கழித்தது ரகுபதிக்கு ஆச்சரியமாக இருந்தது. ''அண்ணனோடுதான் சாப்பிடுவேன்'' எனப் போன வாரம் வரைக்கும் அடம் பிடித்து வளர்ந்த பெண்ணா இவள்? புருஷனைக் கண்டதும் அண்ணனை மறந்து விட்டாளா? தங்களைப் பின்னிப் பிணைத்திருந்த இறுக்கம், எங்கோ தளர்ந்துவிட்டதைப் போலிருந்தது அவனுக்கு.

இருவரும் சாப்பிட்டு எழுந்தார்கள்.

ஆசையாக இன்னும் பேசி முடிக்கவில்லை. ஒரு வார சங்கதிகளை — ஊர் நடப்புகளை — சொல்லி முடியவில்லை. லட்சுமி மறுபடியும் புருஷனைக் கவனிக்கப் போய்விட்டாள்.

மாப்பிள்ளை தலை சீவி. உடை மாற்றி, காலில் செருப்பணிந்து வீதியில் இறங்குகிற வரை கூடவே சென்று வழி அனுப்பி விட்டுத் திரும்பி வரும்வரை — அண்ணனென்று ஒருவன் வந்திருப்பதை மறந்து விட்டவள் போலவே இருந்தது.

அதுவரையிலும் யாரோ அன்னியன் போல அலமாரியிலிருந்த ஒரு பழைய பத்திரிகையைப் புரட்டிக்கொண்டு அமர்ந்திருந்தான். ஊரிலிருந்து கிளம்பும் போதிருந்த உற்சாகம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது.

''என்னண்ணு பண்ணிக்கிட்டிருக்கே?'' கொஞ்ச நேரம் கழித்து லட்சுமி காப்பி தம்ளருடன் அறைக்குள் நுழைந்தாள்.

''சும்மாதான். செய்யறதுக்கு என்ன கெடக்கு?''

''அவருக்கு நான் இல்லாம முடியறதில்லேண்ணு. அனுப்பறதுக்குள்ள போதும் போதும்னு ஆயிருது....'' புதுப் பெண்களுக்கு இயல்பாகவே தோன்றிவிடுகிற 'பௌருஷப் பெருமை'யோடு சொன்னாள்.

நான் என்ன சொல்லட்டும்? என்கிற தோரணையில் ரகுபதி தங்கையைப் பார்த்தான். முகத்தில் புதிதாக ஒரு ஜொலிப்புத் தெரிந்தது. உடம்பில் பூசினாற்போல் சதை போட்டிருந்தது. சொந்த ஊரில் இல்லாத அப்படி என்ன வசதி இங்கே? இதுதான் கல்யாணப் பூரிப்போ? இதுதான் அண்ணனைவிடப் புருஷனைப் பெரிதாக நினைக்க வைக்கிறதோ?

அவனுக்கு எதிலோ ஏமாந்தது போலிருந்தது. பெரியதாக நினைத்த விஷயமும் அற்பமாகப்பட்டது. சீக்கிரமாக வீட்டுக்குக் கிளம்ப வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். இனிமேல் தங்கையைப் பிரிந்திருப்பது தாங்க முடியாத வேதனையாக இருக்காது என்றே தோன்றியது.



# பாங்காக்கில் வாழ வழியுண்டு

ரீகே. ஸ்ரீனிவாசன்

வியட்நாம் யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம். காலம்சென்ற லோக சபை அங்கத்தினர் திரு வி. வி. தேசாயின் தலைமையில் ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினர் — பத்திரிகையாளர் குழு அங்கு விஜயம் செய்தது. அதில் உள்ளடக்கம் ஸ்ரீ எஸ். எஸ். மாரிசாமி, முன்னாள் ராஜ்ய சபை அங்கத்தினர்.

ஹோட்டலில் நாங்கள் உரையாடிக் கொண்டிருந்த போது எங்கள் தாய்லாந்து அனுபவம் பற்றி பிரஸ்தாபம் வந்தது. அப்பொழுது ஒரு பத்திரிகையாளர் கேட்டார்:

''தேசாய் அவர்களே, பாங்காக்கில் இன்று தாய்லாந்தின் ஜனத் தொகையில் ஐந்தில் மூன்று பங்கு உள்ளதே. இந்த யுத்தம் முடிந்த பிறகு அவர்கள் பொருளாதாரம் என்ன ஆகும்?''

ஸ்ரீ தேசாய் சொன்னார்:

''தாய்லாந்து சரித்திரத்தில் பெரும்பாலும் அது சுதந்திர நாடாகவே இருந்து வந்துள்ளது. ஆகையால் அமெரிக்க ஜவான்கள் பணத்தில் இயங்கும் இன்றைய பொருளாதாரம் நாளை வேறு அடிப்படையை ஏற்கும்.''

இது நடந்து பத்தாண்டுகள் ஆகிவிட்டன. இப்பொழுதும் தாய்லாந்து முழுகிவிடவில்லை. அதற்குப் பதிலாக வியட்நாம் மறைமுகத் தாக்குதலுக்கு ஈடு கொடுக்கிறது.

அன்று தாய்லாந்துப் பெண்கள் அருவருப்பான மஸாஜ் அறைகளில் பணி புரிந்தார்கள். அவர்கள் வாடிக்கைக்காரர்கள் அமெரிக்க சோல்ஜர்கள். இது தாய்லாந்து அரசுக்கே தலை குனிவைக் கொடுத்தது. ஆனால் அவர்கள் ஒன்றும் செய்ய முடியவில்லை.

யுத்தம் முடிந்த பின் தாய்லாந்துப் பெண்களுக்குக் கட்டாயக் கல்விக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அத்துடன் அவர்களுக்குத் தொழில் கல்வியும் கொடுக்கப்பட்டது. இன்று தாய்லாந்தில் ரெடிமேட் உடைகள் அமோகமாகத் தயாரிக்கப் படுகின்றன. அவை ஹாங்காங்கில் சக்கைப்போடு போடுகின்றன.

தாய்லாந்தில் ஏராள ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள் கட்டப்பட்டன. இன்று அங்கு தங்கள் விடுமுறையைச் செலவிடுபவர்கள் ஐரோப்பியர்கள். பெரும்பாலும் ஜெர்மானியர்கள். பலரை அணுகிக் கேட்டேன் ''ஏன், நீங்கள் இந்தியாவைக் கடந்துஇங்கு வருகிறீர்கள்'' என்று.

ஒருவர் சொன்னது பொதுவாக எல்லோருக்குமே பொருந்தும்: ''அதைச் சாப்பிடாதே. இதைச் செய்யாதே என்று உத்தரவு போடுவது எங்களுக்குப் பிடிக்காது.''

தாய்லாந்தில் பழைய தவறுகளைச் சரி செய்து, புதிய உத்திகளைக் கையாளத் தயங்குவதில்லை. அரசியல் எப்படி இருந்தாலும் செயல்பாடு பிரமாதம்.





**தி**ங்கள் கிழமை இரவு ஏழு மணியிலிருந்து செவ்வாய்க் காலை பத்து மணி வரை கல்கி காரியாலய அச்சுக் கோப்பாளர்கள் ஆவலோடு காத்திருப்பார்கள்; உதவி ஆசிரியர்கள் சுறுசுறுப்புடன் இயங்குவார்கள். அன்று இரவு சரித்திரத் தொடர்கதை, சங்கீத விமர்சனம், அரசியல் தலையங்கம், ஹாஸ்யக் கட்டுரை என்று பேராசிரியர் கல்கி அவர்களின் பேனா முனை விதம் விதமாகத் தயாரித்துக் கொண்டிருக்கும். எழுத எழுதத் தாள்கள் அச்சுக் கோக்க வந்து கொண்டிருக்கும். ஒரே பேனா, ஒரே மனிதர்! அவர் படைப்பில் தான் எத்தனை வகை!

''வருஷா வருஷம் சிறுகதைப் போட்டி நடத்துகிறோமே, இந்த வருஷம் ஏதாவது மாறுதல் செய்யலாமா?'' என்று யோசித்த போது இந்தத் திங்கள் இரவு — செவ்வாய்க் காலை சம்பவமே நினைவுக்கு வந்தது!

''இந்தத் தடவை மாறுதலாக சரித்திரம், சமூகம், விஞ்ஞானம், ஹாஸ்யம், மர்மம் என்று தனித் தனியே பிரித்துப் போட்டி வைத்தால் என்ன?''

''பேஷான யோசனை. இரண்டாயிரம் ரூபாய் பரிசை இரண்டாயிரத்தைந்நூறு ரூபாயாக உயர்த்தி, ஐந்து பிரிவுகளுக்கும் முதல்பரிசுகளாகவே கொடுத்து விடலாம்!'' என்று தீர்மானித்தோம்.

**ச**மூகக் கதைகள் எழுதுவதில்தான் எழுத்தாளர்களுக்குப் பெருமளவு ஈடுபாடு என்பது ஆயிரக் கணக்கில் வந்து குவிந்த கதைகள் நிரூபித்துள்ளன!

இறுதிப் பரிசீலனைக்கு வந்த கதைகளை அலசி ஆராய்ந்து விவாதித்த பிறகு முதல் பரிசுக்கதையைத் தேர்ந்தெடுப்பதில் ஏகோபித்த முடிவுக்கு வர வழி வகுத்து விட்டார் திருமதி பானுமதி ராஜகோபாலன். அவரது ''ஒரு தவம் தொடர்கிறது'' உருக்கமான கதை அனைவரது நெஞ்சத்தையும் தொட்டது.

பானுமதி பன்னிரண்டு ஆண்டுகளாக எழுத்துத் துறையில் ஈடுபட்டு வருகிறார். புதுவை வானொலியில் இவரது நாடகங்கள் ஒலிபரப்பாகியுள்ளன.

காரைக்காலில் இந்து சமய மன்றத்தின் செயலாளராக இறை பணியிலும் ஈடுபட்டு வருகிறார். திருமதி பானுமதி ராஜகோபாலனுக்குக் கர்னாடக இசையிலும் தேர்ச்சியுண்டு.

''சிறுகதைப் போட்டியில் எனக்குப் பரிசு கிடைத்தது அமரர் கல்கியின் ஆசியால் தான்!'' என்று மனமுருகி எழுதியிருக்கிறார் ஸ்ரீமதி பானுமதி ராஜகோபாலன்.

**வி**ஞ்ஞானக் கதை எழுதுவதற்கு நிபுணத்துவம் தேவை. எலக்ட்ரானிக்ஸ் துறையில் பட்டம் பெற்ற சேகருக்கு விஞ்ஞானத் துறைக் கதைகள் எழுதுவதில் அதிக விருப்பம். அவரே தம்மைப் பற்றித் தமது நகைச்சுவை பாணியில் சொல்கிறார்:

இரண்டு மாதம் முன் இந்தக் கதை எழுதும் போது கோவை பி. எஸ். ஜி. தொழில் நுட்பக் கல்லூரியின் இறுதியாண்டு

கிருஷ்ண குரு

பானுமதி ராஜகோபாலன்



ராமமூர்த்தி



ஆர். சேகர்



சாருகேசி



# ஐந்து பிரிவுகளில் முதல் பரிசுகள்

பி.ஈ. எலக்ட்ரானிக்ஸ் மாணவன். தற்போது சென்னையில் வேலை தேடும் என்ஜினியராய்ப் பிரதர் இன்லாவிடம் சாஷ்டாங்கம்.

சின்ன வயதின் லட்சியங்கள் இரண்டு. ஒன்று என்ஜினியர், மற்றது எழுத்தாளன்.

கல்லூரியில் ஓவியம், சிறுகதை, தபால் தலை, செஸ், கொலாஜ், மோனோ ஆக்டிங், போட்டோகிராபி... (ஸ்...அப்பாடா) துறைகளில் பெற்ற பரிசுகள் ஏராளம். சென்ற ஆண்டு மாணவ எழுத்தாளனும் ''பிரெய்ன் வாஷ்'' மூலம் ஆனந்தவிகடனில் அறிமுகம். தற்போது கல்கியில் முதல் கதையிலேயே பரிசோடு பிரவேசம். தொடர்ந்து விஞ்ஞானக் கதைகள் எழுத விருப்பம்.

என் சித்தப்பா (கிராம கர்ணம் — அந்தக் காலத்திலிருந்து விகடன், கல்கி, மட்டுமே படிக்கும் ஆசாமி) ''டேய் சேகரா விகடன்,

ஒரு குணத்தை அடைய வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் ஏற்கனவே அது உங்களிடம் இருப்பது போல் கற்பனை செய்து கொள்ளுங்கள். விரைவில் அதை உள்ளபடிக்கே அடைந்து விடுவீர்கள். -வில்லியம் ஜேம்ஸ்

- பிரியா பாலு

---

கல்கியில் உன் கதைகள் வந்தாத்தான் உன்னை எழுத்தாளனாக ஒத்துப்பேன்'' என்பார். அப்படி வந்தால் 500 ரூபாய் தருவதாகச் சொல்லியிருந்தார். என்ன சித்தப்பா! நான் ஜெயிச்சுட்டேன்!

நான் ரிஸர்வ்ட் டைப். என்னுடைய எழுத்துலக குரு சுஜாதா. கல்கியில் அவர் எழுதி வந்த விஞ்ஞானக் கதைகள் தந்த உற்சாகம் இக்கதைக்கான ஆதாரம்.

நவீன விஞ்ஞான யுத்திகளை ஹாஸ்யம் தவழப் பயன்படுத்தி வாசகர் விரும்பும்படி தந்திருக்கிறார் சேகர், 'காதலியை வெறுக்கிறேன்' சிறுகதையில்.

''வாசகர்களை என்னைவிடப் புத்திசாலிகளாக நினைத்துக்கொள்ளும் என் எழுத்து. அவர்களின் பாராட்டைக் கேட்கையில் உற்சாகத்தில் புதிதாய் மலர்கிறது. நிறைய மலர வாழ்த்துங்கள்!'' என்று வேண்டுகிறார் சேகர். சேலத்துச் செல்வம் இவர்!

**ம**ர்மமாகப் புனைப்பெயருக்குள் ஒளிந்து கொள்ளாமல் மர்மக் கதை எழுதிய ராமமூர்த்திக்கு இதுவே சிறுகதை உலகுக்குள் முதல் பிரவேசம். அறிமுக எழுத்தாளரான மூர்த்தி, ''என் கதை முதல் முறை பிரசுரம் ஆகப் போவதை அறிந்து மகிழ்ச்சி. அந்தக் கதை பரிசுக் கதையாகவும் அமைந்தது அறிந்து இரட்டிப்பு மகிழ்ச்சி'' என்று பூரிப்படைகிறார். ''மனைவியைக் காணவில்லை!'' நிஜமாகவே திரில்லோடு அமைந்திருக்கிறது. நண்பர்களின் சவாலை ஏற்றுக் கதை எழுதத் துணிந்த இவர் வெற்றி பெற்றுவிட்டார்.

சேலத்துக்கு இரண்டாவது 'முதல் பரிசைப் பெற்றுத் தருவதிலும் வெற்றி.

**சே**லம்மாவட்டத்துக்கு மூன்றாவது முதல் பரிசையும் பெற்றுத் தந்தவர் கிருஷ்ண குரு. சிப்பாய் கலகத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்ற சரித்திரக் கதை. 'பப்ளிசிட்டி'க்குப் பலரும் ஏங்கும் இந்நாளில் ஒரு புகைப்படமோ, தம்மைப் பற்றிய குறிப்போ வெளிவருவதை விரும்பாத அப்பாவி இவர். இதுவே இவரைப் பற்றிய ஒரு முக்கிய குறிப்புத்தானே! 'இன்னும் பல சிறந்த படைப்புக்களை நான் உருவாக்கிய பின், என்னை விரிவாக அறிமுகப்படுத்துங்கள்' என்கிறார் இந்த அறிமுக எழுத்தாளர்.

**வ**ரிக்கு வரி ஹாஸ்யம் இழையோட எழுதக்கூடியவர் சாருகேசி என்ற புனைப்பெயரில் நுழைந்துகொண்டுள்ள திரு. விசுவநாதன்.

''1955ல் எழுத ஆரம்பித்த எனக்கு இது ஸில்வர் ஜுபிலி வருஷம். சுமார் இருநூறுக்கு மேற்பட்ட சிறுகதைகள் எழுதியிருக்கிறேன். இவற்றில் பாதிக்குப் பாதி சீரியஸ் கதைகளும் நகைச்சுவைக் கதைகளும் இருக்கலாம். சிந்திக்க வைப்பது சுலபம்; சிரிக்க வைப்பது சற்றே கஷ்டம் என்ற என் அநுபவத்தை என் நகைச்சுவைக் கதைகளைப் படித்துச் சிரிக்க முடியாதவர்களாவது ஒத்துக் கொள்வார்கள்!'' என்கிறார் மருந்துகள் தயாரிக்கும் ஃபைசர் லிமிடெட்டின் சென்னைக் கிளையிலே பணிபுரியும் இவர். ஆனால் படிக்கும்போது ரொம்ப இலகுவாகக் கதை எழுதப்பட்டிருப்பது போல் நமக்குத் தோன்றுகிறதே. அதுதான் சாருகேசியின் வெற்றி!

—பி. எஸ். எம்.

---




## அபிலாஷா

'புதுமைப் பெண்' என்ற வார்த்தைக்கு முற்றிலும் பொருத்தமானவர் அபிலாஷா. ஓவியக் கூடம் போல அவர் வீட்டில் பலவகை மரபு ஓவியங்களும் மாடர்ன் ஆர்ட்களும் உள்ளன.

அபிலாஷாவுக்கு ரொம்பப் பிடித்த நிறம் பச்சை என்று அவர் அணிந்துள்ள உடையிலிருந்தே கணிக்கலாம். இதனால்தானோ என்னவோ, பூக்களை மட்டுமின்றி இலைகளின் அழகையும் ரசிக்கிறார். கிராமச் சூழ்நிலையின் பசுமையும் தம்மை மிகவும் கவர்வதாகக் கூறுகிறார்.

அபிலாஷா கதக் நாட்டியக் கலைஞரும் கூட. கால்கள் வேகமாகத் தாளத்தோடு விளையாடக் கண்கள் பம்பரமாகச் சுழல ஆடுவது இவரைப் பரவசப்படுத்துகிறது.

ராமண்ணா இயக்கிய 'நீச்சல் குளம்' படத்தில் நடித்துள்ள போதிலும் இன்று சினிமா பற்றிப் பேச்செடுத்தால் ஏனோ ''மூச்'' என்கிறார்!

பேட்டி: சிக்கி

மேலட்டை வண்ணப்படம்: ஹரீஷ்

சதுசய 10

# எதிர்பாராத திருப்பம்

கி. கஸ்தூரி ரங்கன்

ஜனவரி 1, 1978.

அமெரிக்க அதிபர் ஜிம்மி கார்ட்டர் டில்லி விஜயம். ஊரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. இதனிடையே இந்திரா காந்தி தனது காங்கிரஸ் ஆதரவாளர் சம்மேளனத்தைக் கூட்டியிருந்தார். பெரிய ஷாமியான பந்தலின் கீழ் சுமார் 5000 கட்சி உறுப்பினர்கள் கூடினர். தேவராஜ் அர்ஸ், பிரும்மானந்த ரெட்டி தலைமையில் இருந்த காங்கிரஸைப் பிய்த்து வாங்கினர். சென்னா ரெட்டி, கமலபதி திரிபாதி முதலான நாலைந்து பெருந் தலைகள் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டனர். மற்றபடி சவான், சுப்ரமணியம், ஸ்வரன்சிங் முதலான முன்னாள் மந்திரிகள் அனைவரும் இந்திரா காந்தி சம்மேளனத்தைப் பகிஷ்கரித்து விட்டனர்.

1969க்குப் பின் இரண்டாவது முறையாக இந்திரா காந்தி காங்கிரஸ் கட்சியைப் பிளந்தார். அப்போது ஆட்சி கையில் இருந்ததால் புதுக் கட்சி பலமான அடிப்படையில் அமைந்தது. இன்று இந்திரா காந்திக்குப் பதவி போய்விட்டது. ஜனதா ஆட்சியோ விரட்டிக் கொண்டிருக்கிறது. இனிமேல் இந்திராவின் தலைமையில் கட்சிக்கு எதிர்காலம் இல்லை என்று பெரும்பான்மையான சீனியர் தலைவர்களும் பிற அரசியல் கட்சிகளும், பத்திரிகை ஆசிரியர்களும் நினைத்தனர். இந்திரா கட்சியில் சஞ்சய் காந்திக்கு இன்னமும் பெரிய அளவில் பொறுப்பு இருந்து வருவதையும் கவனித்தனர். இந்திராவை விசுவாசித்தவர்கள் சஞ்சயை ஏற்கத் தயாராக இல்லை.

ஜனதா கட்சி பதவி ஏறிய உடனேயே இந்திரா மொரார்ஜியைச் சந்தித்தார். "என்னை எது வேணுமானாலும் செய்து கொள்ளுங்கள். சஞ்சயை ஒன்றும் செய்து விடாதீர்கள்" என்று கண்ணீர் மல்க வேண்டிக்கொண்டார்.

மொரார்ஜிக்கு இந்திரா மீது ஒருவித கோபமும் இல்லை. மாறாகத் தன்னை ஜெயிலுக்கு அனுப்பி 18 மாதங்கள் தனிமையில் சிறை வைத்தது தன் ஆத்ம சக்திக்கு உதவிற்று. அதற்காக இந்திராவுக்கு நன்றி சொல்ல வேண்டும் என்று பேசினார். இந்திரா அவரைச் சிறை வைத்ததன் பயனாக அவர் ஜனதாக் கட்சியின் தலைவராகி, பிரதமராகவும் முடிந்தது.

"நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன்". என்று மொரார்ஜி தேற்றி அனுப்பினார்.

ஆனால் உள்துறை மந்திரியாகப் பொறுப்பேற்ற சரண் சிங்கின் சிந்தனையோ நேர் மாறாக இருந்தது. "பழிவாங்காமல் விடப் போவதில்லை" என்று பகிரங்கமாகச் சொன்னார். "அவசர நிலைக் கொடுமைகளுக்குப் பொறுப்பாளி யாராக இருந்தாலும், தாய் ஆனாலும், பிள்ளையானாலும் அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுத்தே தீருவோம்" என்று கர்ஜித்து பார்லிமெண்டில் ஜனசங், சோஷலிஸ்ட் முதலான தீவிர இந்திரா எதிரிகளிடமிருந்து கைத் தட்டல் பெற்றார்.

மொரார்ஜி இந்திராவை மன்னிக்க விரும்புகிறார் என்று அறிந்ததும் அவருடைய காட்டம் இன்னும் அதிகமாயிற்று.

ஜனதா கட்சி ஆட்சி ஏற்ற கையோடு மொரார்ஜி – சரண்சிங் – ஜகஜீவன்ராம் பூசல் ஆரம்பமாகி விட்டது. ஜனதாக் கட்சியின் தேர்தல் வெற்றிக்குத் தானே முதற் காரணம் என்று ஜகஜீவன்ராம் பிரதமர் பதவிக்குப் போட்டியிட்டார். ஜனசங் மற்றும் பலரும் அவரை ஆதரித்தார்கள். ஆனால் சரண்சிங் ஜகஜீவன்ராம் தலைமையில் தான் கட்சியிலோ ஆட்சியிலோ இருக்க இயலாது என்று தெரிவித்து விடவே ஜெயப்பிரகாஷ் நாராயண் மொரார்ஜியைப் பிரதமராக்குவதுதான் ஜனதா ஒற்றுமைக்கு உரிய செயல் என்று தீர்மானித்தார். முதலில் பொருமிய ஜகஜீவன்ராம் பிறகு மொரார்ஜியின் தலைமைக்கு இசைந்து போனார். ஆனால் மொரார்ஜி தலைமையையும் சரண் சிங் விரும்பவில்லை. அவரும் அவருடைய "ஹனுமான்" ராஜ் நாராயணனும் மொரார்ஜி ஆட்சியைக் கவிழ்ப்



✱ மொரார்ஜி தேசாய்



✱ ஜகஜீவன் ராம்

✱ சரண் சிங்



பது எப்படி என்று திட்டம் தீட்டிக்கொண்டிருந்தனர்.

மொரார்ஜி — சரண்சிங் தகராறில் இந்திரா காந்தி ஒரு பிரச்னையாகவே ஆக்கப்பட்டார். பெரும்பான்மை ஜனதா கட்சி உறுப்பினர்கள் இந்திரா மற்றும் சஞ்சய் மீது ஏதாவது நடவடிக்கை எடுத்தாக வேண்டும் என்று வற்புறுத்திக் கொண்டிருந்தனர். பார்லிமெண்டில் இந்திராவின் அவசரநிலை அதிகார துஷ்பிரயோகம் பற்றியும், சஞ்சயின் மாருதி கார் விவகாரம் பற்றியும் விசாரணை நடத்த வேண்டும் என்றும் தீர்மானம் நிறைவேறியது. ஷா கமிஷன் விசாரணை மூலம் இதுவரை தெரியாத கொடுமைகள் வெளிவந்தன. சுமார் 50000 குற்றச்சாட்டுக்களில் நீதிபதி ஷா பத்து, பன்னிரண்டு குற்றங்களை மட்டுமே விசாரணைக்கு எடுத்துக் கொண்டார். பத்திரிகைகளிலும் ரேடியோவிலும் விரிவாக ஷா கமிஷன் விசாரணை இடம் பெற்றது. இந்திரா மீது மக்களின் கோபம் அதிகரித்தது.

ஷா கமிஷன் போதாது என்று இந்திராவைக் கைது செய்தாக வேண்டும் என்று சரண் சிங் முனைந்தார். இந்திரா அமுலாக்கிய மிசா சட்டத்தின் கீழேயே அவரைச் சிறையில் வைக்க வேண்டும் என்றார். மொரார்ஜி ஒப்புக்கொள்ளவில்லை. இந்திராவைக் கோர்ட்டுகளுக்கு இழுப்பதே போதும், சட்டப்படி எல்லாம் நடக்கட்டும் என்று உத்தரவிட்டார்.

இந்திராவை சாதாரண கிரிமினல் சட்டத்தின் கீழ் கைது செய்வது சுலபமாக இருக்கவில்லை. எல்லாக் குற்றங்களுக்கும் அவர் தான் பொறுப்பு என்று தெரிந்தது. ஆனால் ருசு அகப்படவில்லை. முதலில் தேர்தலுக்காகத் தனியார் கம்பெனிகளிடமிருந்து ஜீப்புகளை லஞ்சமாகப் பெற்றதாகவும், அயல்நாட்டு எண்ணெய்க் கம்பெனியிடம் லஞ்சம் வாங்கியதாகவும் குற்றப் பத்திரிகைகள் தயாரிக்கப்பட்டன.

சரண்சிங் மொரார்ஜியிடம் சென்று இந்திராவைக் கைது செய்வதற்கு இவை போதும், பிறகு வேறு குற்றங்களைத் தடயத்துடன் சேர்த்துக் கொள்ளலாம் என்றார்.

''சரி, தடயம் இருந்தால் கைது செய்யுங்கள். ஆனால் இந்திராவைச் சிறையில் வைக்க வேண்டாம். ஜாமீனில் விட ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார் மொரார்ஜி.

இந்திராவுக்கு முன்பே செய்தி போய்விட்டது. அரை நாள் போலீஸ் அதிகாரிகள் அவரது வீட்டிலேயே பழி கிடந்து மன்றாடிக் கெஞ்சினார்கள். கைது செய்து உடனே ஜாமீனில் விடுவிப்போம் என்றனர். சஞ்சய் காந்தி, பத்திரிகை நிருபர்கள், போட்டோகிராபர்கள் எல்லோரையும் தருவித்தார். இந்திரா ஜனதா ஆட்சியைக் கண்டித்துக் கடுமையான அறிக்கை விட்டார்.

''எனக்கு ஜாமீன் வேண்டாம். சிறையிலேயே வையுங்கள்'' என்றார்.

போலீஸ் அதிகாரிகளுக்குத் தர்மசங்கடமாகிவிட்டது. இந்த விளைவை எதிர்பார்க்கவில்லை. முதலில் அவசரம் அவசரமாக ஹரியானாவில் உல்லாச விடுதி ஒன்றை இந்திராவின் சிறையாகப் பயன்படுத்துவது என்று முடிவு செய்தனர்.

இரவாகிவிட்டது. ஹரியானா எல்லைவரை சென்ற போலீஸ் கார் ரயில் கேட் திறப்பதற்காக நின்றது. இந்திரா கீழே இறங்கி ஒரு பாலத்தின் மேல் உட்கார்ந்துகொண்டார். போலீஸ் காரைத் தொடர்ந்து சஞ்சய் தம் சகாக்களுடனும் வக்கீலுடனும் வந்து சேர்ந்தார். வக்கீல் இந்திராவுடன் ஏதோ பேசினார். போலீஸ் இந்திராவைக் காரில் மீண்டும் ஏறுமாறு கேட்டுக் கொண்டது. இந்திரா மறுத்து விட்டார்.

''டில்லி நகரிலிருந்து என்னை வெளி ராஜ்யத்துக்குக்கொண்டுபோக உங்களுக்கு உரிமை இல்லை. டில்லி சிறையிலேயே வைக்க வேண்டும்'' என்றார்.

போலீஸ் வேறு வழியின்றி இந்திராவைப் பழைய டில்லி பங்களா ஒன்றுக்கு அழைத்துச் சென்று வசதி குறையாமல் காவலில் வைத்தது.

அடுத்த நாள் காலை பார்லிமெண்ட் தெரு மாஜிஸ்டிரேட் கோர்ட்டு முன்னால் ஏகப்பட்ட கூட்டம். அதைவிட அதிகமான போலீஸ் பந்தோபஸ்து. இந்திரா கோர்ட்டில் ஆஜராக்கப்பட்டார். ராஜீவ், சஞ்சய் அவர்களின் மனைவிகளுடன் வந்திருந்தனர். பிராங்க் அந்தோணி இந்திராவின் வக்கீலாக ஆஜரானார்.

மாஜிஸ்டிரேட் தயாள் போலீஸ் வக்கீலை குற்றச்சாட்டுக்களைப் படிக்கச் சொன்னார். தடயங்கள் என்ன என்று கேட்டார். 'விசாரித்துக் கொண்டிருக்கிறோம்' என்றார். ''இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். ''இந்திரா காந்தியை ஜாமீனில் விடலாம்'' என்றார் அரசாங்க வக்கீல்!

''அதை அவரல்லவா கேட்க வேண்டும்!'' என்றார் மாஜிஸ்டிரேட்.

''ஜாமீனில் விடுதலைகோரப்போவதில்லை'' என்றார் இந்திராவின் வக்கீல்.

''ரிமாண்டில் வைக்கும்படி கேட்கிறீர்களா?'' என்று அரசு வக்கீலைக் கேட்டார் மாஜிஸ்டிரேட்.

''வேலைக்கு உணவுத் திட்டத்தை செயல் படுத்திட்டிருக்கிறார் என் கணவர்!''



''அது பற்றி உத்தரவு இல்லை. நீங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்'' என்று அரசு வக்கீல் அசடு வழிந்தார்.

மாஜிஸ்டிரேட் தயாளுக்கு ஒரே எரிச்சல்.

வெளியே பெரும் ரகளை துவங்கியிருந்தது. சஞ்சய் காந்தியின் இளைஞர் படை கல்லெறியில் ஈடுபட போலீஸ் படை கண்ணீர்ப் புகை குண்டுகளை வெடித்தன. புகை கோர்ட்டுக்குள்ளேயே பரவி மாஜிஸ்டிரேட், இந்திரா ஒருவரையும் விட்டு வைக்காமல் எல்லோரையும் சூழ்ந்துகொண்டு அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக ஆக்கிவிட்டது.

மாஜிஸ்ட்ரேட் தயாள் ஐந்தே நிமிடங்களில் தீர்ப்புச் சொன்னார்.

''குற்றம் சாட்டப்பட்டுள்ள இந்திரா காந்தி மீது குற்றப் பத்திரிகைகளில் நடயம் ஏதும் தரப்படவில்லை. அதனால் குற்றவாளியை விடுதலை செய்கிறேன்.''

இந்த எதிர்பாராத திருப்பம் இந்திரா காந்தி குடும்பத்தை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. சரண்சிங் மாஜிஸ்ட்ரேட்டைத் திட்டினார். ஜனதா கட்சிக்காரர்கள் அசடு வழிந்தனர்.

பதவி இழந்து, செல்வாக்கு இழந்து தனித்துப்போன இந்திரா காந்தியின் அரசியல் போராட்டத்தில் கிடைத்த மகத்தான முதல் வெற்றியாக இது அமைந்தது.

''தாழ்ந்து போகாதே. துணிச்சலுடன் எதிர்த்து நில்'' என்று சஞ்சய் அறிவுரை சொல்லி வந்தார்.

இதற்கு அடுத்த கட்டமாக காங்கிரஸ் கட்சியை மீண்டும் இந்திராவின் தலைமையில் கொண்டு வர வேண்டும் என்று சஞ்சய் முனைந்தார். இன்னும் நான்கு மாதங்களில் மகாராஷ்டிரா, கர்நாடகா, ஆந்திரா, வங்காளம், தமிழ்நாடு முதலான ஐந்து ராஜ்யங்களில் மாநிலத் தேர்தல்கள் நடக்கவிருந்தன. தெற்கே இந்திராவின் செல்வாக்கு எள்ளளவும் குறையவில்லை.

ஆனால் கட்சித் தலைமையோ இந்திரா ஒரு பாவச் சுமை என்ற கருத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தது. ஷா கமிஷன் விசாரணை முன் இந்திராவின் முன்னாள் மந்திரிகள் பலர் அவருக்கு எதிராகச் சாட்சியம் தந்தனர். கட்சிக் கூட்டங்களில் இந்திரா, சஞ்சய் மற்றும் அவர்களுடைய ஆதரவாளர்கள் கடுமையாக விமர்சிக்கப்பட்டனர்.

இதையெல்லாம் பொறுக்காத சஞ்சய், ''நன்றி கெட்ட இந்தப் பெருச்சாளிகளிடமிருந்து கட்சியை மீட்க வேண்டும்'' என்றார்.

மீண்டும் கட்சியை உடைப்பது என்று முடிவாகியது. டில்லி சம்மேளனத்தைத் தடபுடலாக நடத்த கர்நாடக முதல்வர் தேவராஜ் அர்ஸும், ஆந்திர முதல்வர் சென்னா ரெட்டியும் லட்சக் கணக்கில் பணம் தேடித் தந்தனர்.

ஒரே நாள்தான் விவாதம். ஏகமனதாக முடிவு.

ஜனவரி 2ம் தேதி இந்திராவின் காங்கிரஸ் கட்சி பிறந்தது. லோக் சபையில் 152 காங்கிரஸ் உறுப்பினர்கள் இருந்தனர். அவர்களில் 75 பேர் இந்திரா பக்கம் வந்துவிட்டனர். பிரும்மானந்த ரெட்டியின் கட்சி ஜனதா ஆட்சியையும் இந்திரா கட்சியையும் ஒருங்கே எதிர்த்தபடி செயல்பட ஆரம்பித்தது. சவான், சுப்ரமணியம், கரன்சிங், டி.ஏ. பை முதலானவர்கள் முன்னைவிட அதிக முக்கியத்துவம் பெற்றனர். காங்கிரஸ் பிளவை விரும்பாத சிலர் இரு கட்சிகளிலிருந்து விலகித் தனியாக இருந்தனர். அதில் ஆர். வெங்கட்ராமன் குறிப்பிடத்தக்கவர். பின்னாளில் இந்திரா கட்சியுடன் ஐக்கியமாகி மந்திரியாகவும் உயர்ந்த ஆர். வி.க்குத் தீர்க்க தரிசனம் இருந்தது போலும்.

புதிய கட்சி உடனடியாக சஞ்சயின் ஆளுகைக்குக் கீழ் முழுமையாக வரவில்லை. தேவராஜ் அர்ஸ், சென்னா ரெட்டி இவர்களே ஆதிக்கம் செலுத்தினர். ஆனால் சஞ்சயின் தூண்டுகோலின்றிக் கட்சி பிளவுபட்டிருக்காது என்று யாவரும் ஒப்புக்கொண்டனர். எனவே, அடுத்த மாதமே நடந்த மாநிலத் தேர்தல்களில் ஆந்திராவும் கர்நாடகாவும் இந்திரா கட்சியைப் பேராதரவுடன் தேர்ந்தெடுக்க, பிற மாநிலங்களிலும் ரெட்டி காங்கிரஸ் வேட்பாளர்கள் அடியோடு தோல்வி காண, இந்திரா காங்கிரஸ் அதிக இடங்களைப் பெற்றபோது சஞ்சய் காந்தியின் அரசியல் சாணக்கியத்தையே யாவரும் கொண்டாடினார்கள். (தொடரும்)

---

நான் சாம்பலாகப் போனாலும் போவேனே தவிர புழுதியாய் இருக்க விரும்ப மாட்டேன். தீப்பிடித்தும் பிரகாசமாக எரிந்து போனாலும் போவேனே தவிர மட்கிப் போக விரும்ப மாட்டேன். எனது ஒவ்வோர் அணுவும் அற்புதமாக ஜொலிக்கும் வண்ணம் ஒரு வால் நட்சத்திரமாகத் தோன்றி மறைந்தாலும் மறைவேனே தவிர, என்றைக்குமே தூங்கி வழிந்து கொண்டிருக்கும் கிரகமாக இருக்க மாட்டேன். மனிதனுடைய வேலை வாழ்வதே தவிர சும்மா உயிரோடிருப்பது அல்ல. -ஜாக் லண்டன்

- பிரியா பாலு

---

''அரசியல் வாதியைக் காதலிச்சியே! எப்ப கல்யாணம்?''

''உம்... காஷ்மீர் பிரச்னை முடியட்டும் அஸ்ஸாம் பிரச்னை அடங்கட்டும் என்று சொல்லிக் காலம் கடத்துகிறார்டி!''





# பலிக்குமா, பார்க்கலாம்!

## ஜிம்மி கார்ட்டர்

● இப்போதைய அவருடைய கிரக தசைகள் அவருக்கு நன்மை பயக்கக் கூடியதாக அமையவில்லை. 1981 அக்டோபர் மாதத்துக்குப் பிறகு நாட்டில் ஏற்படும் தொல்லைகளைப் போக்க அவரால் ஒரு கை கொடுத்து உதவ முடியும். அவர் மீண்டும் ஜனாதிபதி பதவியை எட்டிப் பிடிப்பது துர்லபம்தான்.



## ரொனல்ட் ரீகன்

● இப்போதைய தசாபுக்திகள் அவருக்கு நன்மை விளைவிக்கக்கூடியதாக இருக்கின்றன. இவர் ஜனாதிபதி தேர்தலில் வெற்றியடைய வாய்ப்பு இருக்கிறது. இவருடைய பதவி காலத்தில் யுத்த முஸ்தீபுகள் ஏற்படலாம். 1982 83 ஆண்டுகள் பலவித மோதல்களைத் தோற்றுவிக்கும். உடல் நலத்தைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.



## ஜியா உல் ஹக்

● தற்சமயம் ஒன்றும் பாதகமாகத் தோன்றவிட்டாலும் கிரகங்களின் பாதிப்பு இந்த ஆண்டு நவம்பர் மாதக் கடைசி வாரத்திலோ அல்லது 1981 ஆரம்பத்திலோ தவறினால் மார்ச் ஏப்ரல் மாதங்களிலோ ஏற்படும். அப்புறம் இவரால் பாகிஸ்தானில் ஆட்சி செய்வது கடினம். படைத் தளபதிகளின் புரட்சியைச் சந்திக்க நேரலாம்.



## சுநீல் கவாஸ்கர்

● 63 கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்களில் 23 சதங்கள் போட்டிருக்கும் இவர் டான் பிராட்மெனின் உலக ரிக்கார்டை உடைக்க வேண்டுமானால் மீதியுள்ள ஆறு சதங்களையும் 1981ம் ஆண்டு நடுப் பகுதிக்கு முன் அடித்தாக வேண்டும். அப்புறம் சனிக் கிரகத்தின் பாதிப்பு 1982 முடிய இருக்கலாம். இப்போது சந்தர்ப்பத்தை நழுவ விட்டால் அப்புறம் 1983 வரை காத்திருக்க வேண்டும்.



## லதா மங்கேஷ்கர்

● இவருடைய கிரக அமைப்புகள் ஏற்கனவே இவரை உச்ச நிலைக்குக் கொண்டு வந்து விட்டன. 1984ல் இவர் இப்போதைய சூழ்நிலைகளிலிருந்து ஒதுங்கித் தனிமையை விரும்பக் கூடும்.



## அமிதா பச்சன்

● அடுத்த இரண்டு ஆண்டுகளில் இவர் சில எதிர்பாராத சூழ்நிலைகளைச் சந்திக்க நேரிடும். சமாளித்து வெற்றி காண்பார். 1983 லிருந்து 1986க்குள், திரை உலகிலிருந்து ஓய்வு பெறுவது பற்றிச் சிந்திக்க ஆரம்பிப்பார்.



## அடல் பிஹாரி வாஜ்பேயி

● 1981லிருந்து 1983க்குள் மீண்டும் அதிகாரத்துக்கு வரக்கூடிய வாய்ப்புக்களை இவருடைய கிரகங்கள் குறிக்கின்றன. ஆனால் உடல் நலப்பாதிப்பு இவரை 1985, 1986 ஆண்டுகளில் அரசியலில் தீவிரமாக ஈடுபடுவதைத் தடுக்கலாம்.



## எம். ஜி. ராமச்சந்திரன்

● வாழ்க்கையில் ஆரம்பம் முதல் எதிலும் போராட வேண்டிய கிரகச் சேர்க்கைகள். இவருடைய சாதனைகள் 1982ம் ஆண்டில் பலமான எதிர்ப்புக்களைச் சந்திக்க வேண்டி வரும். இவருடைய ஆதரவாளர்கள், நண்பர்கள் இந்த ஆண்டு முடிந்தவுடன் கொஞ்சம் பின்வாங்கலாம். 1982ல் இவருடைய உடல் நலம் பாதிக்கப்படலாம். அதைத் தொடர்ந்து சில ஆண்டுகள் ஓய்வை நாடுவார்.



## மார்க்கரெட் தாட்சர்

● 1981ம் ஆண்டு முடிய இவர் இங்கிலாந்தின் பிரதமராக இருப்பார். 1982லிருந்து இவருடைய கிரக மாற்றங்கள் இவருக்குச் சாதகமாக இல்லை. இங்கிலாந்தில் இடைத் தேர்தலும், பிரதமர் பதவியில் மாறுதலும் ஏற்படும்.

—மேனு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

[இல்லஸ்டிரேட்டட் வீக்லி விசேஷ ஆருட இதழில் வெளியான கட்டுரையில் சில பகுதிகள்.]

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone; 431543) Editor; K. Rajendran

# தலைவலி
# போயேவிட்டது

ஒரே ஒரு

## ஸாரிடான் மூலம்

ட்ரேட்மார்க் 'ரோஷ்'

**வலிமையானது**
**பாதுகாப்பானது**
**ஒன்றே ஒன்று போதுமானது**




RP. 5977

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# உங்கள் இல்லத்திற்கு வண்ணம் பூச திட்டமிடுகிறீர்களா?

**வாருங்கள், முழு விவரங்களை**

**நெரோலாக் பெயிண்ட்ஸ் உங்களுக்கு விளக்கக் காத்திருக்கிறது !**

உங்கள் இல்லம் என்பது உங்களைப் பற்றி உணர்த்துவது ஆகும். புத்தகங்கள், படங்கள், பர்னிச்சர்கள் போன்றவைகளை வாங்கிப் போடுவதன் மூலம் வீட்டிற்கு உங்களின் தனித்தன்மையை காட்டுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை நெறிமுறைக்கு உகந்த ஒரு பின்னணியை அமைக்க அதில் இசையையும் வண்ணத்தையும் இட்டு நிரப்புகிறீர்கள். உங்கள் மனநிறைவுக்கு ஏற்றபடி உங்கள் இல்லத்தை உருவாக்கிட, ஒரு ஆர்வ ஈடுபாடு தேவைப்படுகிறது. ஏனெனில் அந்த உருவாக்கம், உங்கள் சொந்த உள்ளாசைகளிலும் தேவைகளிலும் கலந்து கனிகிறது.

எனவே நம் வேலை உங்களிடமிருந்தே தொடங்கட்டும். உங்கள் வீட்டிற்கு வண்ணம்பூசும் வேலையை மேற்கொள்ளும் முன்பாக, உங்களின் தேவைகள் என்னென்ன என்பதை அலசிப் பார்க்க வேண்டியது அவசியம்.

முதல் கட்டமாக, இந்தச் சில அடிப்படைக் கேள்விகளை உங்களிடமே கேட்டுப் பாருங்கள்:

வண்ணங்களைப் பற்றி நான் தெரிந்திருக்க வேண்டிய அவசியம் என்ன?

வண்ணங்களின் எத்தகைய கூட்டுக் கலவை, நான் கொடுக்கும் பணத்திற்குக் கூடுதல் பயனை எனக்குத் தரும்?

ஒவ்வொரு அறைக்கும் பொருத்தமான வண்ணத் திட்டத்தை நான் தேர்ந்தெடுப்பது எப்படி?

வண்ணம் பூசும் வேலையிலுள்ள பிரச்சினைகளை நான் எவ்வாறு குறைத்துக் கொள்ள முடியும்?

வண்ணங்களையும், வண்ணம் பூசுதலையும் பற்றிய தெளிவான விவரங்களை அறிய, நான் யாருடன் தொடர்பு கொள்ள வேண்டும்?

இவைகளுக்கும் இவை போன்ற இன்னும் அநேக கேள்விகளுக்கும் உரிய விளக்கத்தை, தொடர்ந்து வெளிவரவிருக்கும் எங்களது விளம்பரங்கள், உங்களுக்கு அளிக்கும். உங்கள் இல்லத்திற்கு வண்ணம் பூசும் வேலையை நம்பிக்கையோடு திட்டமிட, அந்த விளம்பரங்கள் பிரத்யேக முறையில் அமைக்கப் பட்டுள்ளன.




**நெரோலாக் பெயிண்ட்ஸ்**

இல்லங்களுக்கு எழிலூட்டும் வண்ணங்கள்.